# செந்தமிழ்ச் செல்வி




## உள்ளுறை



சிலம்பு-ருரு] வள்ளுவர் ஆண்டு-உ०கக, கார்த்திகை, Dec. 80 [பரல்-ச

# 'செந்தமிழ்ச் செல்வி'

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)

இதழாசிரியர் கூட்டத்து உறுப்பினர்கள்

க. மொழிப் பேரறிஞர் ஞா. தேவநேயப் பாவாணர், எம்.ஏ.
*இயக்குநர், தமிழ்நாட்டரசுச் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்டம், சென்னை-8*

உ. செஞ்சொற்கொண்டல், வித்துவான்,
முனைவர் சொ. சிங்காரவேலன், எம்.ஏ.,டிப்.லிங்., பி.எச்.டி.,
*மாயூரம்.*

ங. முனைவர் ச. வே. சுப்பிரமணியம், எம்.ஏ., பி.எச்.டி.
*இயக்குநர், உலகத்தமிழ் ஆராய்ச்சி மன்றம், சென்னை.*

ச. பேராசிரியர் கு. சுந்தரமூர்த்தி, எம். ஏ.
*முதல்வர், செந்தமிழ்க் கல்லூரி, திருப்பனந்தாள்.*

ரு. புலவர் இரா. இளங்குமரன், *தலைமைத் தமிழாசிரியர், மு. மு. உயர்நிலைப்பள்ளி, திருநகர், மதுரை-6.*

சிறப்பாசிரியர்: தாமரைச்செல்வர் வ. சுப்பையா.

---

# செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு

| சிலம்பு ருரு | திருவள்ளுவர் ஆண்டு ௨௦௧௧, கார்த்திகை<br>திசம்பர் 1980 | பரல் ௪ |
|---|---|---|


## கழகமும் வரலாற்றுக் கலைக் களஞ்சியமும்

(முன் இதழின் தொடர்ச்சி)

முன் இதழில் கழகம் வெளியிட்டுள்ள தமிழ்ப் புலவர், சங்கப் புலவர், சங்ககால அரசர் வரலாற்று நூல்கள் ஆகியவைபற்றிய குறிப்புக்கள் எழுதப்பெற்றன. இனி மக்கள், மொழி, இலக்கியம், சமயம், அரசு, ஆட்சி, அறிவியல் முதலியவைபற்றிக் கழகம் வெளியிட்டுள்ள நூல்களைப் பற்றிய குறிப்புக்கள் இதன்கண் எழுதப்பெறும்.

இப்போதுள்ள குமரி நாட்டுக்குத் தென்பக்கம், முதல் இடை கடைச் சங்கங்களிருந்த பெரிய நிலப்பரப்பு கடலில் ஆழ்ந்துவிட்ட செய்தி பற்றிய "குமரிக் கண்டம்" என்ற நூலும், இந்தியாவின் வடமேற்குப் பகுதியில் மண்மூடி மறைந்துபோன சிந்துவெளி நாகரிகமுடைய பெருநகரம் பற்றிய "மொகெஞ்சொ-தரோ" என்ற நூலும் மேலை நாட்டு அறிஞர் பெருமக்கள் ஆராய்ந்து ஆங்கிலத்தில் எழுதிய நூல்களைக் கொண்டு படங்களோடு 1941இல் கழகம் வெளியிட்டுள்ளது. அவ்விரண்டும் மேற்கொண்டு நான்கு பதிப்புக்களைப் பெற்றிருக்கின்றன. அவற்றிற்கு ஆதாரமான கருத்துக்கள் சங்கத் தமிழ் நூல்களில் குறிக்கப்பெற்றிருக்கின்றன என்பது மறுக்கொணு உண்மையாகும். குமரிக்குத் தென் பக்கமிருந்த பெரிய நிலப்பரப்பு கடலில் ஆழ்ந்த காலத்திலேதான் வடக்கே இமயமலை தோன்றியதென்பதும் அதற்காதாரமாக அம் மலையில் கடல்படு பொருள்கள் பல காணப்பெறுகின்றன என்பதும் உண்மையாகும்.

அடுத்துத் திரு. வி. கனகசபைபிள்ளை ஆங்கிலத்தில் எழுதிய "Tamil 1800 years Ago" என்ற நூலும் அதனை மொழிபெயர்த்து "ஆயிரத் தெண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம்", பேராசிரியர் மு. சி. பூரணலிங்கம்பிள்ளை எழுதிய "Tamil India", திரு. ந. சி. கந்தையா எழுதிய "தமிழ் இந்தியா", பேராசிரியர் வி. ஆர். இராமச்சந்திர தீட்சிதர் ஆங்கிலத்தில் எழுதிய "Origin and Spread of the Tamils", நமது நாடு, தமிழகம், தமிழக வரலாறு (சொற்பொழிவு நூல்), இங்கிலாந்து வரலாறு ஆகிய வரலாற்று நூல்களும் கழகவழி வெளியிடப்பட்டுள்ளன.

இனி மொழி பற்றி முனைவர் இலக்குவனார் ஆங்கிலத்தில் எழுதிய "Tamil Language" என்ற நூலும் திராவிடப் பிரகாசிகை, மொழி நூல், மொழி அரசி, நமது மொழி, திரவிடத்தாய், பழந் தமிழ் ஆட்சி, பௌத்தமும் தமிழும், சமணமும் தமிழும், கிறித்துவமும் தமிழும் ஆகிய நூல்களும் கழகம் வெளியிட்டுள்ளது.

இனி இலக்கியம் பற்றித் தமிழ் இலக்கிய வரலாறு (பேராசிரியர் கா. சு. பிள்ளை), தமிழ் இலக்கிய வரலாறு (பேராசிரியர் அடைக்கல சாமி), உலக இலக்கியங்கள் ஆகிய நூல்கள் வெளியிடப்பட்டிருக்கின்றன. மறைமலையடிகள் எழுதிய "பண்டைக்காலத் தமிழரும் ஆரியரும்", கில்பர்ட் சிலேட்டர் எழுதிய ஆங்கில நூலினின்றும் மொழிபெயர்க்கப்பெற்ற "இந்திய நாகரிகத்தில் திராவிடப் பண்பு" என்ற நூலும் இங்கே குறிக்கப்பெறுவன.

இனி 'அரசு' என்ற தலைப்பில் அரசியல் விளக்கம், இறைமாட்சி அல்லது அரசியல், பல நாட்டு அரசியல் அமைப்புக்கள், அரசியல் அறிவு (சொற்பொழிவு நூல்), அரசாங்கத்தின் வரலாறு ஆகிய நூல்களையும், 'ஆட்சி' என்ற தலைப்பில் சேரர், சோழர், பாண்டியர், பல்லவர், நாயக்கர், ஆங்கிலேயர் ஆகியோர் ஆட்சி பற்றித் தனித்தனியாக ஆறு நூல்களையும் கழகம் வெளியிட்டுள்ளது. 'அரசர்' என்ற தலைப்பில் நரசிம்மவர்மன், மகேந்திர வர்மன், மாமன்னர் (இராசராச சோழன்) குலோத்துங்கர் மூவர் ஆகிய நூல்கள் வெளிவந்திருக்கின்றன.

இனி 'அறிவியல் துறை' என்னுந் தலைப்பில் நுண்ணுயிர்கள், நம்மைச் சுற்றி நாற்பது உயிர்கள் (2 பகுதிகள்), நிலவின் கதை, ஒலியின் கதை, நட்சத்திரங்களின் கதை, கோள்களின் கதை, மண்ணும் விண்ணும், பூமியின் கதை, இரும்பின் கதை, நிலக்கரியின் கதை, மலையின் கதை, ஆற்றின் கதை, நீரின் கதை, கடலின் கதை என்னும் நூல்களும் சங்க இலக்கியங்களில் செடி

கொடி விளக்கம், புள்ளின விளக்கம், விலங்கின விளக்கம் ஆகிய நூல்களும் பிறவும் வெளியிடப்பட்டுள்ளன.

'அறிவியலறிஞர்கள்' என்னுந் தலைப்பில் தாமசு ஆல்வா எடிசன், கலீலியோ, லூதர்பர்பாங், அறிவியல் முனைவர் ஐன்ஸ்டீன், புதியது புனைந்த அறிவியல் அறிஞர்கள், சர். சகதீச சந்திரபோசு, சர். பி. சி. ராய், சர். சி. வி. இராமன், அறிவியல் அறிஞர் மூவர் முதலியோர் வரலாறுகள் வெளியிடப்பட்டிருக்கின்றன.

'அரசியல் தலைவர்கள்' என்னுந் தலைப்பில் காந்தியடிகள், நேரு மாமா, முதற் குடியரசுத் தலைவர் இராசேந்திரபிரசாத், லால்பகதூர் சாத்திரி, கோகலே, வங்க வீரர், டாக்டர் ஆர். கே. சண்முகஞ் செட்டியார், முதலமைச்சர் காமராசர் முதலியோர் வரலாறுகள் வெளியிடப்பெற்றிருக்கின்றன.

பயணம் பற்றிக் கழகம் அடியிற் குறிப்பிட்ட நூல்களை வெளியிட்டுள்ளது. சிந்துபாது கடற்பயணம், கடலின்கண் முத்து (இலங்கை), ஆப்பிரிக்கச் சுற்றுலா, கலிவரின் யாத்திரைகள், வாஸ்கோடகாமா, ஜினோவாவீரன் (கொலம்பசு), நாடுகண்டவர் வரலாறு (2 பகுதிகள்), நாடுகண்ட பெருமக்கள்.

சமயத் தலைவர்கள் என்னுந் தலைப்பில் வெளிவந்தவை, திருத்தொண்டர் மாக்கதை, Grand Epic of Saivism, மாணிக்கவாசகர் வரலாறும் காலமும், அறுமுகன் அடியவர் வரலாறு, ஆழ்வார்கள் வரலாறு (2 பகுதிகள்), ஆழ்வார்கள் வழிக்குரவர் வரலாறு (2 பகுதிகள்), சம்பந்தர் வரலாற்றாராய்ச்சியும் தேவாரத் திறனாய்வும், அப்பர் வரலாற்றாராய்ச்சியும் தேவாரத் திறனாய்வும், சுந்தரர் வரலாற்றாராய்ச்சியும் தேவாரத் திறனாய்வும் ஆகிய நூல்களாகும்.

வழிபாட்டுத் தொடர்பாகச் சிவப்பதிகள் வரலாறு, (வழி விளக்கப் படமும்,) நெல்லைக் குடைவரைக் கோயில்கள், மதுரைக் கோயில் வரலாறு, Magnificent Madurai ஆகியவற்றையும் 'சமயம்' பற்றி நமது சமயம், தமிழர் மதம் (மறைமலையடிகள்), தமிழர் சமயம் (கா. சு. பிள்ளை), சமயங்கள் (சி. எம். ஆர்.), பழந்தமிழ்க் கொள்கையே சைவசமயம் (மறைமலையடிகள்) ஆகியவற்றையும் கழகம் வெளியிட்டுள்ளது.

தமிழ்ப் புலவர்களைப் பற்றி மேலும் வெளியிடப் பெற்றவை முனைவர் தணிகைமணி வ. சு. செங்கல்வராயபிள்ளை, தமிழ்க்கடல் அலையோசை (க. அன்பழகன்), முப்பெரும் புலவர்கள், தமிழ்காத்த தலைவர்கள், முத்தமிழ் வளர்த்த முனிவர்கள், அறநூல் தந்த அறிவாளர்கள், காவியஞ் செய்த மூவர், மதுரை இருபெரும் புலவர்கள், Makers of Modern Tamil முதலியனவாகும்.

வங்காளம் படைத்த உலகப் பெருங் கவிஞர் இரவீந்திரநாத் தாகூர் வரலாற்றையும் அழகுறக் கழகம் வெளியிட்டுள்ளது.

தமிழ் எழுத்துக்களின் நுண்மை விளக்கம், சென்னைச் சிலைகளின் கதை, இதழ் விளக்க அகரவரிசை, செய்தி இதழ்களின் கதை ஆகியவை மிகவும் போற்றுதற்குரிய நூல்களாகும்.

கழகம் நடத்தி வரும் திங்களிதழ் "செந்தமிழ்ச் செல்வி" 55 ஆண்டுகளாக நடந்து வருவதில் நாடு, மொழி, கலை முதலியவைபற்றிய வரலாற்றுக் குறிப்புக்கள் ஏராளமாகவுள்ளன.

தமிழாட்சித் துறைக்காக, காவல் துறை, ஆட்சிச் சொல் அகர வரிசை, நகராட்சி முறை, தமிழில் எழுதுவோம், சட்டமன்ற நடை முறை, ஆவணங்களும் பதிவு முறையும், ஆட்சித் துறைத் தமிழ், சட்டத் தமிழ், சட்டவியல், தீங்கியல் சட்டம் ஆகிய நூல்களைக் கழகம் வெளியிட்டுள்ளது.

கழகவிழா மலர்கட்குக் கட்டுரை எழுதியவர்களின் வரலாற்றுக் குறிப்புக்கள் அவரவர்கள் படங்களோடு தலைப்பில் பொறிக்கப்பட்டிருக்கின்றன. அதன்வழி 125க்கு மேற்பட்ட புலவர் பெருமக்கள் வரலாறுகள் கிடைக்கப் பெறுகின்றன.

பழம் பதிப்பு நூல்கள் சிறியவையோ, பெரியவையோ அவற்றை எழுதியவர்கள் தங்கள் காலத்திலுள்ள புலவர்களிடம் சாற்றுக் கவிகள் வாங்கி வெளியிட்டு வரும் வழக்கம் முன்பு இருந்தது. அவை யாவும் கூடுமானவரை எழுதித் தொகுக்கப் பெற்று மறைமலையடிகள் நூல் நிலையத்தில் ஆராய்ச்சியாளர்கட்குப் பயன்படும்பொருட்டு வைக்கப்பெற்றிருக்கின்றன. அவற்றால் ஒரு காலத்துப் புலவர்கள் எவரெவர் என்பதை அறிந்துகொள்ளலாம்.

இந்தியாவுக்கு உரிமை வாங்கித் தந்த உலகப் பேரருட் செல்வர் (மகாத்மா) காந்தியடிகள், உரிமை பெற்றதும் இந்தியா வின் தலைமையமைச்சராகப் பணிபுரிந்த உலகப் புகழ்மிகு பண்டித சவகர்லால் நேரு, தமிழ்நாட்டு முதலமைச்சர் பேரறிஞர் அண்ணா ஆகிய மூவரும் பிரிவுற்றபோது முறையே 'உரிமையின் பரிசு', 'உலகப்பேரொளி', 'தமிழ்ப்பேரொளி' என்னுந் தலைப்புக்களில் படங்களோடு மூன்று கவின்மிகு நூல்கள் வெளிவந்தன. அவை பற்றிய விளக்கக் குறிப்புக்களும் பிறவும் அடுத்த இதழில் எழுதப் பெறும்.

கழகம் இதுகாறும் வெளியிட்டுள்ள 1715 நூல்களில் ஏறக்குறைய 360க்கு மேற்பட்டவை "வரலாற்று நூல்களாக" உள்ளனவாகும்.

வ. சு.

———

# உலகத்தமிழ்க் கருத்தரங்கு மாநாடு

[ஞா. தேவநேயன்]

இன்று, இறைவனருளால், ஐந்தாம் உலகத்தமிழ்க் கருத்தரங்கு மாநாடு மாண்புமிகு முதலமைச்சர் ம. கோ. இராமச் சந்திரனுர் தலைமையில் நிகழவிருக்கின்றது. கடந்த மூவாயிரம் ஆண்டாக மறையுண்டு கிடந்த குமரிநாட்டு முழுக்கு கண்ணெதிரில் நிகழுங் காட்சிபோல் தெள்ளத் தெளியக் காட்டும் திரைப்படம், உண்மைத் தமிழர் அனைவரும் மகிழவும், ஒப்புயர்வற்றதென்று உயர்ந்தோர் புகழவும், உலகஞ் சுற்றிவந்து என்றுந் திகழவும், இருக்கின்றது.

தமிழாரியப் போராட்டம்

தமிழர் தம் நாட்டிலேயே வாழ்ந்து தம் தாய்மொழியைப் போற்றிவருகின்றனர் ; வேறெந்நாட்டிற்குஞ் சென்று வேற்று மொழியைத் தாக்கவில்லை.

தமிழ் கி. மு நூறாயிரம் ஆண்டுகட்குமுன் குமரிநாட்டில் தோன்றிய உலக முதன்மொழி.

> ''வைய மீன்றதொல் மக்கள்தம் உள்ளத்தைக்
> கையி னுலுரை கால மிரிந்திடப்
> பைய நாவை யசைத்த பைந்தமிழ்
> ஐயை தாள்தலை கொண்டு பணிகுவாம்.''

> ''ஓங்க லிடைவந் துயர்ந்தோர் தொழவிளங்கி
> ஏங்கொலிநீர் ஞாலத் திருளகற்றும் ஆங்கவற்றுள்
> மின்னேர் தனியாழி வெங்கதிரோன் றேனையது
> தன்னே ரிலாத தமிழ்.''

உலகில் முதன்முதல், எழுதுறைப்பட்ட முழுத்தூய செய்யுளிலக்கியமும், பொருளிலக்கணத்தொடு கூடிய பிண்டவிலக்கணமும், இயலிசைநாடகமென்னும் முத்தமிழ் இணைந்த மாபிண்டத் தமிழும், தோன்றிய காலம் தோரா. கி. மு. 10ஆம் நூற்றாண்டு. ஐரோப்பாவிற் கிரேக்க நாட்டிற்குக் கிழக்கில் நடுமேலையாசியாவில், கிரேக்கத்திற்கு இனமான ஒரு மொழியைப் பேசிக்கொண்டு, நாடுநகரின்றி மாடுமேய்க்கும் நாடோடிகளாய்த் திரிந்த ஒரு மாந்தர் கூட்டம், இலக்கியமின்றியும் எழுத்தின்றியும் சில சிறு தெய்வ வழுத்துக்களை மட்டும் கொண்டு, இந்தியாவிற் புகுந்த

காலம் கி. மு. தோரா. 1500. அவர் சிறுபான்மையராயிருந்ததனுல், பழங்குடித் திரவிட மக்களொடு கலந்துபோயினர். அவர் மொழி வழக்கற்றது. அதனுல், தாம் புகுந்த நாட்டுமொழியையே தாய் மொழியாகக் கொண்டனர். அவருடைய பூசாரியர் மட்டும் தம்மை ஆரியர் என்றுகூறிக்கொண்டு, தம் முன்னேர் மொழியும் பிராகிருதம் என்னும் பழங்குடி மக்கள் மொழியுங் கலந்த வேதமொழியிற் பல சிறுதெய்வ வழுத்துக்களையும் பாடி வந்தனர். அப் பாடற்றிரட்டே இருக்குவேதம் என்னும் முதல் ஆரிய இலக்கியம். தமிழரொடு தொடர்புகொண்டு அவர் நாகரிகத் தலைமையைக் கண்ட ஆரியப் பூசாரியர், காளி வணக்கத்தையும் முருக வழிபாட்டையுங் கைக் கொண்டு, பின்னர் சிவமதம் திருமால்மதம் ஆகிய இரு பெருந் தமிழ மதங்களையும் மேற்கொண்டு, முத்திரு மேனிக்கொள்கை வாயிலாக அவற்றை ஆரிய வண்ணமாக்கி இந்துமதம் என்று பெயரிட்டுக்கொண்டனர். இந்துமதம் என்று ஒரு தனி மதமில்லை. ஆரியரின் சிறுதெய்வ வேள்வி வழிபாடும் தமிழரின் இருபெரு மதங்களும் கலந்த கலவையே இந்துமதம். சிவனையும் திருமாலையும் தனித்தனி முத்தொழில் தலைவராகக் கொள்ளும் தமிழ் மதங்களும், தனித்தனி ஒரு தொழில் தலைவனுகக் கொள்ளும் மூத்திருமேனிக் கொள்கையும், முரண்பட்டனவாகும். ஆதலால் இது தமிழர்க்கு உடன்பாடன்று. இதன் விளக்கத்தை என் 'தமிழர் மதம்' என்னும் நூலிற் காண்க.

ஆரியப் பூசாரியர் தம் வெண்ணிறத்தால் தம்மை நிலத் தேவரென்றும், தம் முன்னேர் மொழியின் எடுப்பொலியால் அதைத் தேவமொழி யென்றும், மூவேந்தரையும் ஏமாற்றி விட்டனர். அவரும், தம் பழங்குடிப் பேதைமையாலும் மதப் பித்தத்தாலும் கொடைமடத்தாலும் ஏமாறிக் கெட்டனர்.

அவ் வேமாற்றை, அவர் வழியினர், அறிவும் ஆராய்ச்சியும், மிக்க இவ்விருபதாம் நூற்றுண்டிலும் தொடர முயல்கின்றனர். இது வீட்டார் தூங்கும் போது திருடிய திருடன், அவர் எழுந்த பின்பும் திருடக் கருதுவது போன்றதே.

நான் 1943ஆம் ஆண்டு சென்னை முத்தியாலுப்பேட்டை உயர்நிலைப்பள்ளித் தலைமைத் தமிழாசிரியனுக இருந்தபோது, அப் பள்ளித் தலைமையாசிரியர் ஞா. இலக்குமணசாமி செட்டியார், என்னி டம், "ஐயா, பரிதிமாற்கலைஞன் என்னும் சூரியநாராயண சாத்திரியார் எனக்குக் கிறித்தவக் கல்லூரியிற் கலையிளைஞன் (B. A) வகுப்பில் தமிழ்கற்பித்தபோது, பிராமண மாணவரையும் வைத்துக்கொண்டு பிராமணர் தமிழரை ஏமாற்றிவிட்டனர் என்று சொன்னுரையா!"

என்று கூறியது, இன்றும் இன்றுசொன்னது போன்றே யிருக்கின்றது.

ஆரியப் பூசாரியர், தம்மைப் போற்றிக் காத்த தமிழரை நன்றி கெட்ட தனமாக நால்வகைப் பிறவிக் குலமாகப் பிரித்து, அவர் ஒற்றுமையைக் குலைத்துப் பகுத்தறிவிலிகளாகத் தாழ்த்தியது மன்றி, அவர் முன்னோரின் விலைமதிப்பில்லா எழுநிலச் செய்யுளிலக்கணத்தையும் முத்தமிழிலக்கணத்தையும் முற்றும் அழித்து விட்டனர். அங்ஙனமிருந்தும்,

> "எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
> செய்ந்நன்றி கொன்ற மகற்கு" (110)

என்பதற்கேற்பப் பழிக்குப்பழி வாங்காது,

> "இன்னாசெய் தார்க்கும் இனியவே செய்யாக்கால்
> என்ன பயத்ததோ சால்பு." (987)

என்னும் உயர் நெறியைக் கடைப்பிடித்துச் சான்றாண்மை பூண்டொழுகும் தமிழ்ப் புலவரையும் சற்றும் பொருட்படுத்தாது, குமரிநாட்டுக் கொள்கை புலவர் புனைந்துரையென்றும், அதைத் தூள் தூளாக்குவே மென்றும் வாய்காவாது வரம்பிறந்து சொல்வளர்ப்பது, தம்மைத் தமிழர் தூள் தூளாக்கும் நிலைமையைத் தாமே வலிய வருவிப்பது போன்றதேயாகும்.

பண்டையாரியப் பூசாரியரின் இரண்டகச் செயல் விளைவை நன்குணர்ந்து அதைத் தடுப்பதற்கே, வாய்மையும் நடுநிலைமையும் வாய்ந்த (P. T.) சீநிவாசையங்காரும் (V. R.) இராமச்சந்திர தீட்சிதரும் Stone Age in India, History of the Tamils, Pre-Historic South India, Origin and Spread of the Tamils முதலிய அரிய வரலாற்றாராய்ச்சி நூல்களை வரைந்து போந்தனர். அவற்றை, ஆரிய வெறிபிடித்த நீலகண்ட சாத்திரியாரும், அடிமைத்தனத்திற் பிறந்து வளர்ந்த பாலகிருட்டிண நாயரும், எத்துணை மாற்றியெழுதினும் உண்மை ஒருபோதும் மறையாது. "எண்ணெயும் உண்மையும் இறுதியில் மேற்படும்" ("Oil and truth will get uppermost at last")

## தமிழரும் பிராமணரும் தழுவி வாழ்தல்

பிராமணரின் முன்னோர் தமிழகத்திற் புகுந்து மூவாயிரம் ஆண்டாகின்றது. அவர் தமிழர்க்குப் பயன்படும் கல்வியராகவும் வரவில்லை; செல்வராகவும் வரவில்லை; பொருமறவராகவும்

வரவில்லை; பெருந் தொகையராகவும் வரவில்லை; ஒவ்வொருவ ராகவும் சிற்சிலராகவும் கையுங் காலுமாக வந்தனர்.

தமிழர், அகத்தியர் முதலான ஆரியரை வரவேற்று, திருக் கோவிலிலும் திருமடத்திலும் ஊட்டுப் புரையிலும் ஊர்ச் சத்திரத் திலும் உறையுளளித்து, அவியுணவும் செவியுணவும் ஆரவூட்டி அறிஞராக்கினர். ஆரியர் தமிழ் நெடுங்கணக்கினின்று வடமொழி வண்ணமாலை வகுத்து, ஆயிரக்கணக்கான தமிழ்ச் சொற்களை வேதமொழியொடு சேர்த்தும், தூய தென்சொல் வேர்களினின்று நூற்றுக்கணக்கான திரிசொற்களைத் திரித்தும், சமற்கிருதம் என்னும் விரிவான இலக்கிய மொழியைத் தோற்றுவித்து, பல்துறைத் தமிழ் முதனூல்களையும் அதில் மொழி பெயர்த்தபின், மூல நூல்களை யழித்து மொழிபெயர்ப்பு நூல்களையே மூலமாகக் காட்டி, இந்திய நாகரிகம் ஆரியரதென்று மேலையரும் நம்புமாறு செய்துவிட்டனர்.

பிராமணர் தம்மை நிலத்தேவரென்றும், தம் இலக்கிய மொழி தேவமொழியாதலாற் பிறமொழியினின்று கடன் கொள்ளா தென்றும், ஏமாற்றியதைப் பேதை வேந்தரும் பொதுமக்களும் புலவரும் நம்பிவிட்டதனால், ஆரியர் சொல்லிற்கும் செயலிற்கும், திருவள்ளுவர் காலம்வரை எவ்வகை யெதிர்ப்பும் இல்லாது போயிற்று.

வேதமொழிக்குப் பிந்தினது சமற்கிருதம். இரண்டும் எழுத்து மொழியேயன்றிப் பேச்சு மொழியல்ல. இறந்துபட்ட இலத்தீனைக் கற்றுப் பேசுவதுபோன்றே, பையற் பருவத்தினின்று பத்து அல்லது பதினைந்தாண்டு கற்றுப் பேசுகின்றனர். தமிழ், தெலுங்கு, ஆங்கிலம், பிரஞ்சு போலச் சிறு பிள்ளைகள் தம் பெற்றோரினின்று சமற்கிருதத்தைக் கற்றுப் பேசமுடியாது. அதனால், அது உயிருள்ள மொழியன்று. அதே சமயத்தில் அது இறந்த மொழியுமன்று. பிறந்ததே யிறக்கும். சமற்கிருதம் பிறந்ததும் இல்லை; இறந்தது மில்லை; பழமையும் பாவையும் போன்றது. இலத்தீன் போன்றதே சிறந்த மொழி.

ஆரியரின் பேரறியப்படா முன்னோர் மொழி கிரேக்கத்தைப் பெரிதும் ஒத்தது. பாடுமேர் (Bodmer) எழுதிய 'The Loom of Language' என்னும் மொழிநூலைப் பார்க்க.

சமற்கிருதம் தேவமொழியாயின், அதற்கு இனமான கிரேக் கமும் இலத்தீனமும் செருமானியமும் தேவமொழிகளாயும், ஆரிய மொழிக் குடும்பத்திற்கு அடிமூலமான தமிழ் தேவ தேவமொழி

யாயும் இருத்தல் வேண்டும். இங்ஙனமே, பிராமணர் நிலத்தேவ ராயின், ஆரிய மொழி பேசும் ஏனையரும் நிலத்தேவராயும் தமிழர் மூல நிலத்தேவராயும் இருத்தல் வேண்டும்.

பிராமணர் பிறர்போல் மணஞ்செய்வதினாலேயே பிள்ளை பிறக்கின்றதென்றும், கலப்பு மணத்தினாலும் பிள்ளை பிறக்கு மென்றும், இந்தியாவில் மட்டும் பிராமணருள்ளன ரென்றும், நன்னிறமுள்ள பிற வகுப்பாரும் பூணூலணிந்துகொண்டும் பிராமணர்போற் பேசிக்கொண்டும் பிராமணராகலாமென்றும், பிராமணர்க்கே சிறப்பான உடற்கூறொன்றுமில்லை யென்றும், பிறப்பாற் சிறப்பில்லையென்றும், இதையே,

"பிறப்பொக்கு மெல்லா வுயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்"

என்று திருவள்ளுவர் விதந்தோதினர் என்றும் அறிக.

பிராமணர் தமிழ்நாட்டைவிட்டுப் பெயரவும் முடியாது. இனிமேல் தமிழரை அவர் ஏமாற்றவும் முடியாது. எல்லாத் தமிழரும் சான்றோருமல்லர்; எல்லாப் பிராமணரும் கயவருமல்லர். ஆரியத்தை யெதிர்த்துத் தமிழைப் பேணிய நக்கீரர், பரிதிமாற் கலைஞர், சீநிவாச ஐயங்கார், இராமச்சந்திர தீட்சிதர், Dravidian India எழுதிய சேச (சேஷ) ஐயங்கார், கடை வள்ளலார் காலம் எழுதிய S. கிருட்டிணசாமி ஐயங்கார் முதலிய பிராமணர் பலர், வையாபுரிப் பிள்ளையினும், தெ. பொ. மீ.யினும் சிறந்த தமிழரே ஆதலால், இனிமேல், பிராமணர் அனைவரும் பிணக்கின்றித் தமிழரொடு பிணைந்து வாழ்ந்து, தமிழ்நாட்டரசிலும் தலைமை தாங்கித் தமிழையே பேணித் தமிழராகவே விளங்குவாராக. இந்து, இந்தியன் எக்சுபிரசு (Express) ஆகிய இரு சிறந்த உலகப் பொது ஆங்கில நாட்சரி ஆசிரியர் இதைக் கவனிப்பாராக.

மாநாடு நடைமுறை

மண்ணுலகில் மதிமாந்தன் (Homo Sepiens) தோன்றியதி லிருந்து இடையறாது வழங்கிவரும் உலக முதல் உயர்தனிச் செம்மொழியாகிய தமிழ், இலத்தீன் போன்று இறந்த மொழியு மன்று; சமற்கிருதம் போன்று எழுத்து மொழியுமன்று. ஆதலால், மாநாட்டு நிகழ்ச்சிகள் யாவும் பொதுமக்கட்கும் விளங்குமாறு தமிழிலேயே நடைபெறுதல் வேண்டும். மாநாட்டு மண்டபம் எல்லாரையும் கொள்ளாததலால், வெளிநாட்டு விருந்தினரும் புலவரும் பெருமக்களும் மண்டபத்திற்குள்ளும், பொதுமக்கள்

மண்டபத்தின்முன் வெளியே ஒலி பெருக்கிகளும் தொலைக்காட்சி களும் சுடர் விளக்குகளும் பொருத்தி மாபெரும் பந்தலடியிலும் இருத்தல் வேண்டும்.

வெளிநாடுகளினின்று வரும் படிநிகராளியரும் (Representa-tives) தமிழ் பேசவியலாவிடினும் அச்சிட்டதைப் படிக்கவாவது தெரிந்திருத்தல் வேண்டும். ஓர் ஆங்கில மாநாட்டில், ஆங்கில மறியாத ஒருவர் தம் தாய்மொழியிற் பேசவாவது படிக்கவாவது இசைவுபெற இயலுமா என்று எண்ணிப் பார்த்தல் வேண்டும். இதுவரை நான்கு மாநாடுகள் ஆங்கிலத்தில் நடைபெற்று விட்டதனுல், இந்த மாநாட்டில் மட்டும் தமிழ் தெரியாத வெளி நாட்டார்க்குத் தவிர்ப்புக் கொடுக்கலாம். ஆயின், அது ஒரு தனி நிகழ்ச்சியா யிருத்தல் வேண்டும்.

இது மொழி மாநாடாதலால், அதிகாரம், கட்சி, செல்வம், நட்பு முதலிய சார்பின்றி, இயன்றவரை புலவரின் வரிசையறிந்து போற்றல் வேண்டும்.

மாநாட்டுக் கட்டுரைகளையும் நிகழ்ச்சிகளையும் அடக்க விலைப் பதிப்பில் வெளியிட்டு விற்றல் நன்று.

## உண்மைத் தமிழர் கடமை

வருகின்ற மதுரை உலகத் தமிழ்க் கருத்தரங்கு மாநாட்டிற்கு, உண்மைத் தமிழர் கடல்போல் திரண்டு வருக.

இம் மாநாடு இதுவரை நடந்தவை போன்றதன்று. அயல் நாட்டறிஞர் ஆயிரவர் வரலாம். தமிழ் மாந்தன் தோன்றிய குமரி நாட்டு உலக முதன்மொழி யென்னும் உண்மை, பகைவர் மனத் திலும் பசுமரத் தாணிபோற் பதியுமாறு, திரைப்பட வாயிலாகக் காட்சியளவையிற் காட்டப்பட விருக்கின்றது. தமிழின் தொன்மை முன்மை தென்மை முதலிய தன்மைகளையும், தமிழ் நாகரிகத்தின் தனிச் சிறப்பையும், பண்டைத் தமிழரின் பல்வகைப் பெருமை யையும், அணிவகுத்துக் காட்டிவரும் அட்டோலக்க வூர்வலம் ஒன்று ஆரவாரமாக நிகழும். நிலையான ஓர் அருங்காட்சியகமும் கண்கவர் கவினேடமையும். இற்றைத் தமிழகத்தில் வரலாற்று முறையில் தலைசிறந்த பண்டைப் பாண்டியன் தலைநகராகிய மதுரை மாநகரும், புதியதோர் கோலங்கொள்ளும். கடைக் கழகம் போன்ற ஒரு புலவர் கழகமும் நிறுவப்பெறும்.

தமிழன் பிறந்தகம் மாந்தன் பிறந்தகமாகிய குமரிநாடே யென்னும் அடிப்படையுண்மை, இம் மாநாட்டில் அறுதியும் இறுதியும் உறுதியுமாக முடிபுறல் வேண்டும்.

அடுத்த மாநாடு 1985இல் வடஆப்பிரிக்கச் செனகெல் (SENEGAL) நாட்டில், அதன் குடியரசுத் தலைவர் மேன்மை

தங்கிய லியபோல்டு செங்கோர் தலைமையில் நடைபெறல் வேண்டும். அதற்குத் தமிழ்நாட்டுப் புலவர் குழுவை முதலமைச்சரே நடத்திச் செல்லல் வேண்டும். அம் மாநாட்டில், தமிழே உலக முதன்மொழி யென்றும், ஆரியத்திற்கு அடிமணை யென்றும், இந்திய நாகரிகம் தமிழரதென்றும், யாம் (பிறரும் யானும்) ஐயத்திரிபற நாட்டுவேம். அதை இந்தியா, செருமனி, பிரெஞ்சு, இங்கிலாந்து, அமெரிக்கா முதலிய பன்னாட்டு ஆரியப் புலவரும் பட்டிமன்றத்தில் எதிர்க்கலாம். இறைவனருளால், அப் போலி யெதிர்ப்பை யெல்லாம் தவிடு பொடியாகத் தகர்த் தெறிவேம்.

பேரன் சேயானை அதாவது பாட்டனைப் பெற்ற பூட்டனைப் பெற்றான் என்பதுபோல், ஆரியத்தினின்று தமிழ் பிறந்த தென்பதும்; முட்செடியில் முந்திரிப் பழம் பழுத்தது என்பதுபோல், ஆரியச் சிறு தெய்வ வணக்கத்தினின்று சிவதிருமாற் பெருந்தேவ மதங்கள் திரிந்தன வென்பதும்; மரப்பாவை ஓர் உயிர் மகவை ஈன்றது என்பதுபோல், பாணினீயத்தினின்று தொல்காப்பியந் தோன்றிற் றென்பதும், அன்றே டொழிதல் வேண்டும்.

தென்மொழி வடமொழிகளின் முன்மை பின்மையையும் மென்மை வன்மையையும் நாட்ட, அவற்றின் தோற்றக் காலமும் நெடுங்கணக்குமே போதிய சான்றாகும்.

தமிழ் நாட்டு அரசிலும் பல்கலைக் கழகங்களிலும் தமிழே தலைமையாகவும் (Main), சமற்கிருதம் கீழ்த்துணையாகவும் (Subsidiary), வழங்குதல் வேண்டும்.

தமிழ்நாட்டுத் திருக்கோயில் வழிபாடு, தமிழிலேயே தமிழப் போற்றிமாராலேயே நடைபெறல் வேண்டும். பாரதக் காலத்திற்குப் பின்னரே, பிராமணர் தமிழ் வழிபாட்டு மரபை மாற்றி வடமொழி வழிபாட்டை வஞ்சமாகப் புகுத்தும் ஆகமங்களைத் தோற்றுவித்துள்ளனர். (History of the Tamils 105-12) இந்திய வொன்றிய நடுவணரசு, சமற்கிருதம், அரபி, பாரசீகம் ஆகிய மும்மொழித் தலைமைப் புலவர்க்கும் ஆண்டுதோறும் வழங்கும் பரிசையுஞ் செய்யுஞ் சிறப்பையும் தமிழ்ப் புலவர்க்கும் வழங்குதலும் செய்தலும் வேண்டும்.

இவையெல்லாம் நிகழ்ந்த பின்னரே தமிழ்நாடு உண்மையான விடுதலை பெற்றதாகும். ஆங்கில ஆட்சி நீக்கத்தால் தமிழ்நாடு பேரடிமைத்தனமே பெற்றுள்ளது.

தமிழ் வாழ்க! தமிழ்ப்பகை வீழ்க!

தமிழ்நாட்டு முதலமைச்சர் கையைத் தவ வலுப்படுத்துக.

———

# சங்க நூல்களில்
# தில்லையும் குல்லையும்

[திரு. பி. எல். சாமி, ஐ ஏ. எசு.]

சங்க நூல்களில் தில்லை என்றொரு மரமும் குல்லை என்றொரு குறுஞ் செடியும் கூறப்பட்டுள்ளன. அவை அறிவியற்படி எவை என்பதை ஆராயலாம்.

"குருளை நீர்நாய் கொழுமீன் மாந்தித்
தில்லையம் பொதும்பிற் பள்ளி கொள்ளும்
மெல்லம் புலம்ப கண்டிசின் பொறையன்" —புறம் 252

"நன்றே பாணி கொண்கனது நட்பே
தில்லை யன்ன புல்லென் சடையோ
டள்ளிலைத் தாளி கொய்யு மோனே."

—ஐங்குறுநூறு - 131

"தில்லை பாலை கல்லிவர் முல்லை
குல்லை பிடவஞ் சிறுமா ரோடம்"

—குறிஞ்சிப்பாட்டு 77-78 வரிகள்

"..........................................முறி திரிந்த
கண்டலந் தண்டில்லை கலந்து கழிசூழ்ந்த
மண்டலந் தண்டாழை பிணைந்து"

—திணைமாலை நூற்றைம்பது - 61

ஐங்குறுநூறு உரைக் குறிப்பில் உ. வே. சாமிநாதய்யர் தில்லை ஒருவகை மரம் என்று எழுதியுள்ளார். தில்லை என்ற மரத்தை நன்கு அறிந்திருக்க வேண்டிய தமிழர் இன்னும் பலர் அறியாதிருப்பது வருந்தத்தக்கது. தில்லை நடராசரும் தில்லைக் காளியும் சிறப்புமிக்க தெய்வங்களாவர். ஒரு காலத்தில் சிதம்பரம் தில்லைக் காடாக இருந்தது. ஆதலின் தில்லை எனப்பட்டது. இன்றும் சிதம்பரம் அருகேயுள்ள பிச்சாவரம் சதுப்பு நிலக் காடுகளில் (Mangcore forest) தில்லை மரங்கள் நிறைய உள்ளன. தில்லைக் காட்டில் மிகப் பண்டைக் காலத்தில் காளியைத் தாய்த் தெய்வமாக வணங்கி வந்தனர். சிவபெருமான் காளியுடன் ஆடி ஊர்த்துவ தாண்டவத்தில் காளியைத் தோற்கடித்ததாக ஒரு மரபு வழிக் கதையும் வழங்குகின்றது. இதன் காரணமாகவே, 'தில்லைக் காளி எல்லை தாண்டாள்' என்ற வழக்கு தோன்றியிருக்கலாம்.

தில்லேக் காடு சிவபெருமான் நடனமாடின சிதம்பரமாக மாறவே, காளி தில்லே எல்லேயில் சக்தி தெய்வமாக நிறுத்தப்பட்டாள். இன்றும் தில்லேயின் எல்லேயில் தில்லேக் காளி வீற்றிருப்பதைக் காணலாம். தில்லே மரம் கடற்கரை யோரங்களிலும் கழிகளின் ஓரங்களிலும் உப்புமண் மிக்க சதுப்பு நிலங்களில் வளரும். புறநானூற்றில் (252) மெல்லம் புலம்பனின் நெய்தல் நிலத்தில் தில்லேயம் பொதும்பு கூறப்பட்டுள்ளது. அந்தத் தில்லேப் பொதும்பில் நீர்நாய் பள்ளிகொண்டதாகக் கூறினதும், அறிவியற் செய்தியேயாகும். நீர்நாய்கள் கடற்கரைக் கழிமுகங்களில் வாழ்ந் தனவாய் அங்கு இருந்த தில்லேப் பொதும்பரில் பள்ளி கொண்ட தாகக் கூறினது பொருத்தமேயாகும். தில்லே மரத்தை ஐங்குறு நூறும் நெய்தலில் கூறியிருப்பதைக் கவனிக்க வேண்டும். தில்லே மரம் வேறு எந்த நிலத்திலும் வளராது. தில்லே மரத்தின் தோற் றத்தைத் தலேமயிர்க் கற்றைச் சடைக்கு ஒப்பிட்டுப் புறநானூறு (252) கூறியுள்ளது. தில்லே மரம் புதல் போன்று வளரும் (grows into a bushy tree) என்றும் கூறுவார். ஆதலின் தில்லேயம் பொதும்பர் என்று கூறியது பொருத்தமே. தில்லேயின் அடிமரம் வளேந்து சாய்ந்து காணப்படும் என்றும் அதிலிருந்து செங்குத்தாகக் கிளேகள் காணப்படும் என்றும் கூறுவர். இந்தத் தோற்றத்தையே தலேமயிர்க் கற்றைச் சடைக்கு ஒப்பிட்டுப் புறநானூறு கூறி யுள்ளது.

சடா பாரத்தை அணிந்துள்ள சிவபெருமானே கற்றைச்சடை போன்ற தோற்றத்தையுடைய தில்லேமரக்காட்டில் தெய்வமாக வீற்றிருந்தது பொருத்தமேயாகும். தில்லே மரத்தை நெய்தல் நிலமக்கள் ஊருக்கு வேலியாக வளர்த்தனர் என்பதை ஐங்குறு நூறு (131) கூறியுள்ளது. தில்லேயின் எல்லேயில் காளி இருப் பதின் பொருத்தமும் விளங்குகின்றது. தில்லே மரத்தை வேலியாக வுடை ய ஊராகத் தில்லே பண்டைக் காலத்தில் திகழ்ந்திருக்கலாம். தில்லே மரத்தின் பால் கொடிய நச்சுத் தன்மை யுடையதாகும். உடலில் பட்டால் புண் உண்டாகும். கண்ணில் பால் பட்டால் பார்வை போய்விடும். இதன் காரணமாக எல்லேயில் நட்டு வளர்த்து வேலியாக்கியிருக்கலாம். தில்லே மரத்தை நான் நேரில் பிச்சாவரம் காடுகளிலும், காரைக்கால் அரசலாற்றங் கழிக்கரை யிலும் கண்டுள்ளேன். இந்த மரத்தின் இலேயை ஆடு, மாடுகள் தின்னுததால் மரம் நன்கு வளரும். திணேமாலேயில் தில்லே மரமானது கண்டலுடனும் தாழையுடனும் கலந்து கழிக் கானலில் காணப்படுவது கூறப்பட்டுள்ளது. பிற்கால உரையாசிரியர் சிலர் கண்டலேத் தாழை என்று கூறினர். கண்டல் வேறு, தாழை வேறு. கண்டல் கழிக்கானலில் வாழும் தனிப்பட்ட மரக் குடும்ப

மாகும். வெண் கண்டல், காய்க் கண்டல் முதலிய கண்டல் மரத்தின் வகை சில உள்ளன. தாழை புல்வகைக் குடும்பத்தைச் சார்ந்ததாகும். சங்க நூலில் கூறப்பட்டுள்ள நெய்தல் நிலச் செடி கொடி மரங்களைக் காண வேண்டுமானல் பிச்சாவரம் காட்டிற்குச் செல்ல வேண்டும். பெரும்பாலான நெய்தல் திணைக் குரிய செடி கொடி மரங்களைக் காணலாம். பிச்சாவரம் காட்டைப் பயணிகளின் பொழுதுபோக்கு இடமாக மாற்றத் தமிழக அரசு திட்டமிட்டுள்ளது. விடுதி ஒன்று கட்டப்படுகின்றது. ஆயினும் பிச்சாவரக் காடுகளில் உள்ள கண்டல், தில்லை, தாழை, ஞாழல் போன்ற மரங்களைப் பெயர்ப் பலகையுடன் காட்டி அத்துடன் நெய்தல் திணையைப் பற்றி ஒரு கையேடும் பயணிகளுக்கு ஆங்கி லத்திலும் தமிழிலும் தந்தால் சிறப்பாக இருக்கும். பிச்சாவரம் கழிகளையே சங்க நூல்களில் கூறிய நெய்தல் திணைக்கு இயற்கைக் காட்சியகமாகக் காட்டினல் மிகச் சிறப்பாக இருக்கும். இவ்வாறு ஒவ்வொரு திணைக்கும் குறிப்பிட்ட இடங்களைத் தேர்ந்தெடுத்து இயற்கைக் காட்சியகங்களை அமைக்கலாம். கோடைக் கானலில் குறிஞ்சித் திணையைப் பற்றிய இயற்கைக் காட்சியகத்தை அமைக்கலாம்.

குறிஞ்சிப் பாட்டில் 'தில்லை, பாலை, கல்லிவர் முல்லை, குல்லை' ஆகியவை ஒரே வரியில் கூறப்பட்டுள்ளதைக் காணலாம். தில்லை உப்புமிக்க உவர் மண்ணில் கடற்கானலில் வளர்வதாகும். பாலை வெப்பமிக்க நிலத்தில் வளர்வதாகும். இயற்கையில் முல்லை இலையுதிர் காடுகளில் வளர்வதாகும். குல்லை குறிஞ்சி நிலத்திலும் வெற்று நிலத்திலும் காணப்படுவதாகும். ஆதலின் குறிஞ்சிப் பாட்டு இவ்வாறு கூறியது இயற்கையைப் பற்றிய விளக்கமன்று. பாட்டு நயத்திற்காகக் கூறப்பட்டது என்பதைப் புலவர் பலர் தெளிந்தாரில்லை. ஆரிய மன்னனுக்குச் சங்க இலக்கியத்தில் வழங்கிய செடி கொடி மரப் பெயர்களைத் தெரிந்து கொள்ளவும் பண்டைத் தமிழர் வாழ்க்கை நெறிமுறையான களவு நெறியைக் கண்டறியவும் குறிஞ்சிப் பாட்டைக், கபிலர் பாடினர் என்பதை உணர வேண்டும்.

குல்லை என்ரெரு செடியைப் பற்றிச் சங்க நூல்களிலே செய்திகள் பயில்கின்றன. பிற்கால நூல்களில் குல்லையைப் பற்றிய குறிப்புகள் இல்லை.

''குல்லை குளவி கூதளங் குவளை
இல்லமொடு மிடைந்த ஈர்ந்தண் கண்ணியன்''

—நற்றிணை 376

''குல்லைக் கண்ணி வடுகர் முனையது
பல்வேற் கட்டி நன்னாட் டும்பர்'' —குறுந்தொகை 11

''எல்லை தருநன் பல்கதிர் பரப்பிக்
குல்லை கரியவுங் கோடெரி நைப்பவும்''
—பொருநராற்றுப்படை. 233 - 234

''குல்லையம் புறவிற் குவிமுகை யவிழ்ந்த''
—சிறுபாணாற்றுப்படை 29

''இணைத்த கோதை யணைத்த கூந்தன்
முடித்த குல்லை யிலையுடை நறும்பூச்''
—திருமுருகாற்றுப்படை 200 - 201

''புல்லிலை வெட்சியும் பிடவுந் தளவுங்
குல்லையுங் குருந்துங் கோடலும் பாங்கருங்
கல்லவுங் கடத்தவுங் கமழ்கண்ணி மலைந்தனர்''
—கலித்தொகை. 103

''மல்லிகை மௌவன் மணங்கமழ் சண்பகம்
அல்லி கழுநீ ரரவிந்த மாம்பல்
குல்லை வகுளங் குருக்கத்தி பாதிரி
நல்லிணர் நாக நறவஞ் சுரபுன்னை
எல்லாங் கமழு மிருசார் கரை கலிழத்''
—பரிபாடல் 12 : 77 - 81

உ. வே. சாமிநாதையர் பரிபாடலுக்கு எழுதிய அரும்பத முதலிய அகராதியில் குல்லையை வெட்சி, துளசி என்று கூறியுள்ளார். இந்த அரும்பதப் பொருள் முற்றிலும் தவறானதாகும். வெட்சியும் துளசியும் குல்லையின் முற்றிலும் வேறான செடிகளாகும். திவாகரம் 'கஞ்சங் குல்லை கஞ்சா வாகும்' என்று கூறிற்று. திவாகர நிகண்டு தெரிந்து தெளிந்து கூறியுள்ளது. கஞ்சாச் செடியே சங்க காலத்துக் குல்லையாகும். கலித்தொகையில் வெட்சியும் குல்லையும் ஒரே பாட்டில் தனியே கூறப்பட்டிருப்பதையும் கவனிக்க வேண்டும். ஆதலின் வெட்சி குல்லையாக இருக்க முடியாது. கலித்தொகைக்குக் குறிப்புரை எழுதிய அனந்தராமய்யர் குல்லை, கஞ்சங் குல்லை, கஞ்சா என்று எழுதி இச் சொல் கஞ்சம் குல்லை யென இரண்டாகவுங் கொள்ளப்படும் என்று எழுதினர். இரண்டாகவும் கொள்ளப்படும் என்றது தவறு. கஞ்சா என்ற சொல் வடமொழியிலிருந்து வந்தது. கஞ்சாச் செடியிலிருந்து கஞ்சா என்ற போதைப் பொருளைப் பயன்படுத்தினர். குல்லை யென்பதைப் பிற்காலத்தில் நன்கு தெரிந்துகொள்ளாததால் அதை விளக்க வடமொழிச் சொல்லுடன் கூடிய கூட்டுப் பெயரான 'கஞ்சங்

குல்லை' என்ற பெயரைப் பயன்படுத்தினர். திருமுருகாற்றுப் படையுரையில் நச்சினார்க்கினியர், 'இலையைத் தலையிலே யணிந்த கஞ்சங் குல்லை யினையும்' என்று கூறிய உரை பொருத்தமாக வுள்ளது. நச்சினார்க்கினியர் காலத்தில் கஞ்சா என்ற போதைப் பொருள் பழகின தொன்றாகும். ஆயினும் திருமுருகாற்றுப்படை யில் கஞ்சாச் செடியின் போதைப் பொருள் குறிப்பிடப்படவில்லை என்பதைத் தெளிவாக்குவதற்காகவே 'இலையைத் தலையிலே அணிந்த' என்று கூறினார். திருமுருகாற்றுப்படை இயற்றப் பெற்ற காலத்தில் குல்லைச் செடி நறுமணச் செடியாகக் கருதப் பட்டதன்றிப் போதைப் பொருள்தரும் செடியாகக் கருதப்பட வில்லை. கஞ்சாச் செடியின் இலையும் பூவும் நல்ல நறுமணமுடை யவை. கஞ்சாச் செடியின் இலையும் பூத்தண்டும் போதைப் பொருளைத் தருகின்றன. 'முடித்த குல்லை இலையுடை நறும்பூ' என்று கூறினதால் திருமுருகாற்றுப்படையில் குல்லையின் இலையும் பூவும் நறுமணமிக்கவை என்பது கூறப்பட்டுள்ளது. நற்றிணையில் தலைவன் அணியும் கண்ணியில் நறுமணமிக்க பூக்களான குல்லை, குளவி, கூதளம், குவளை, இல்லம் ஆகியவை கூறப்பட்டுள்ளதைக் கவனிக்க வேண்டும். நற்றிணை உரையாசிரியரான பின்னத் தூரார் 'குல்லை கஞ்சா; துழாயுமாம்' என்று எழுதினார். இதை வைத்துத்தான் உ. வே. சாமிநாதையர் பரிபாடல் அரும்பத உரையில் துழாய் என்று குல்லைக்குப் பொருள் கூறினர் போலும். குறுந்தொகையில் குல்லைப் பூவை வடுகர் கண்ணியில் அணிந்த தாகக் கூறப்பட்டுள்ளது. பல்வேற் கட்டியின் நாட்டுக்கு அப்பால் இருந்த வடுகர் என்று கூறியிருப்பதால் இன்றைய கருநாடக நாட்டைச் சேர்ந்த வடுகர் கூறப்பட்டுள்ளார் என்பது தெரி கின்றது. குல்லை இலையுதிர் காட்டுப் பகுதிகளிலும், பயிரிடப் பயன்படாத நிலங்களிலும் வளரும். இக்காலத்தில் அரசிற்குத் தெரியாமல் பழங்குடி மக்கள் கஞ்சாச் செடியைப் பயிரிட்டு விற்கின் றனர். குல்லை எனும் காஞ்சாச் செடியைப் பயிரிடக் கூடாது என்று இந்திய அரசு தடை விதித்துள்ளது. தற்காலத்தில் தடைசெய்யப் பட்ட செடி சங்க காலத்தில் நறுமணந்தரும் செடியாக இருந்ததை ஆராய்ந்து அறியும்போது வியப்புறாமல் இருக்க முடியாது.

தில்லை மரத்தை ஆங்கிலத்தில் 'Blinding tree' என்று கூறுவர். கண்ணைக் குருடாக்கும் மரம் என்பது ஆங்கிலப் பெயரின் பொருளாகும். அறிவியலில் Excoelaria Agallocha என்றழைக் கப்படும். குல்லையை ஆங்கிலத்தில் Ganija அல்லது Bhang என்றழைப்பர். அறிவியலில் Cannafis Iativus என்றழைப்பர்.

———

# தொல்காப்பியம் சுட்டும் இசையியல்

[பேராசிரியர் வீ. ப. கா. சுந்தரம்

இறையியல் கல்லூரி, மதுரை.]

(முன் இதழ் கஅ௫ஆம் பக்கத் தொடர்ச்சி)

**11.** அளவடியின் சிறப்பும் முதன்மையும் :

எட்டு எண்ணிக்கையை ஆதிதாளம் என்று சொல்கிறோம் எட்டு எண்ணுக்குள் பாடுவதற்கு என அமைக்கப்பட்ட அடியே அளவடி. இது நாற்சீர் கொண்டது. தாளம் இட்டுப் பாடுங் கால்—ஒருசீர் இரண்டு எண்ணிக்கை கொள்கிறது. (பாடித் தாள மிட்டுக் காட்டுக)

"நாற்சீர் கொண்டது அடியெனப் படுமே"

—தொல். செய். 31

இந்தச் சூத்திரமே அளவடியில் எழுதப்பட்டது. 'அடி'—என்று சொன்னாலே அளவடி என்றுதான் பொருள். (வள்ளுவர் என்றால் திருக்குறள் எழுதிய திருவள்ளுவரை மட்டும் குறிப்பது போன்று. அரசனின் சிறப்புச் செய்தியை வள்ளுபவன்—வள்ளுவன். வள்ளு தல்—வழங்குதல்). அடிஇலக்கணம் கூறத் தொடங்கிய தொல் காப்பியர் முதற்கண் சிறப்பாக அளவடியை 'அடி' எனச் சிறப்புச் சுட்டாகத்தனித்துத் தலை நிறுத்தியமை—இசைஅமைப்புக்கருதியே. நாற்சீர்களை—இரண்டு இரண்டு எனச் சமமாகப் பிரிக்கலாம். எட் டினை—நாலும் நாலும் என இரு சமமாகப் பிரிக்கலாம். இப்படிச் சமமாகப் பிரிப்பதைச் சங்க காலத்தில் மட்டத்தாளம் என்றனர். இதுவே ஆதியில் தோன்றியது. அளவடியே—ஆதி அடி. அள வடிக்கு உரியதே ஆதிதாளம். பிறஅடிவகைகள் அளவடியி னின்றும் தோன்றிய குறுக்கமும் நீட்டமும் ஆகும்; இரண்டும், மூன்றும் நாலின் குறுக்கம்; ஐந்து முதல் பிற தாள எண்ணிக் கைகள் நாலின் நீட்டம். எனவே இரு சமமாக அமைந்தும், பிற அளவைகளைக் கிளைக்கச் செய்தும், முதன்மை பெற்றும் முன்மை பெற்றும் ஒலியிலே வன்மை பெற்றும் தொடைவகை எழில்பெற்றும் விளங்கும் இசையமைப்பே—அளவடி. கீர்த்தனைகளில் பல்லவி அடிகளும், சரணங்களின் அடிகளும் அளவடியே பெரும்பாலும். கீர்த்தனைத் தோற்றமும், வெண்பாத் தோற்றமும் அகவல் தோற்ற

மும் அளவடியில் தொடங்கிப் பிற அடிகட்குச் செல்லுவன. அந்த அடிக்குள்ளேதான்—இணைமோனை, பொழிப்புமோனை, கீழ்க் கதுவாய் மோனை, முதிய மோனை வகைகள் எல்லாம் தொல்காப் பியர் காலத்திற்குமுன் தோன்றி மரபு மாருமல் இன்றுவரை வந்து கொண்டிருக்கின்றன.

*''அடியுள் ளனவே தளையொடு தொடையே''*

—தொல். செய். 32

பாட்டின் பிறப்பும் பாட்டின் சிறப்பும் அளவடியில்தான் ஆதியில் மலர்ந்து—இன்று கீர்த்தனைவரை குன்ருத குன்றென நின்று நிலவுகிறது.

*''அடியின் சிறப்பே பாட்டெனப் படுமே''*

—தொல். செய். 34

''பட்டாங்கு அமைந்த ஈரடி'' எனும் தொல்காப்பிய வரிக்கு (எச்சவியல். 10) கழகப் புலவர் இளவழகனர்—(கழக வெளியீடு 344) 'இயல்பாக அமைந்த அளவடி' என்று குறிப்பு எழுதினர். ஆதி மாந்தன் பாட்டுப் பாடத் தொடங்கியபோது' அவனது இயல் பில் பட்டு, உள்ளத்தில் உணரப்பட்டு இயற்கையாக அமைந்ததே அளவடி; அதனைத் தொல்காப்பியர் 'பட்டாங்கு அமைந்த அளவடி' என்ருர். இந்த அளவடி—தாளவுணர்ச்சியால்—இயற்கையாக உலக மாந்தர் அனைவர் பாட்டிலும் அமைந்தது. இசைப்பாடல் இலக்கணம்—தாள இலக்கணம்—கொட்டுமுழக்கு இலக்கணம்—உலகப்பொது; அனைத்து நாட்டுக்கும் பொருந்துவன. தொல் காப்பியத்திற்கு முந்தியே எந்தநாட்டு இலக்கண நூலிலாவது அள வடிச் சிறப்பும், பிறப்பும் இந்த அளவிற்கு விரிவாகக் கூறப்பட் டுள்ளதா என ஆராய்தல் வேண்டும். ஆய்ந்து கண்டு—பின் தொல்காப்பியரின் இசைக் குறிப்புகளின் தொன்மைகளையும் வள மைகளையும் எடுத்தோதுதல் வேண்டும்.

## 12. ஐவகை அடிகள் :

செய்யுள் அடிகள் ஐந்துதாம் என்று தொல்காப்பியர் பல சூத்திரங்களில் தெரிவிக்கின்ருர். அனைத்துலக இசையிலும் அடிப்படை கால அளவுகள்—காலக் கணிப்பு அலகு வகைகள் ஐந்துதாம்.

*''ஐவகை யடியும் ஆசிரியக் குரிய''* —செய். 51
*''...இன்சீர் வகையின் ஐந்தடிக் குரிய''* —செய். 53
*''குறளடி முதலா ஐந்தடி...''* —செய். 240

| | அடியின் பெயர் | சீர் | எழுத்துகள் | இன்றுள்ள அலகு அளவு ஒப்பு |
|---|---|---|---|---|
| 1. | குறளடி | 2 | 4—6 | 2 எண்—துரிதம் |
| 2. | சிந்தடி | 3 | 7—9 | 3 எண்—திரிச்சுரம் |
| 3. | நேரடி | 4 | 10—14 | 4 எண்—சதுச்சுரம் |
| 4. | நெடிலடி | 5 | 15—17 | 5 எண்—கண்டம் |
| 5. | கழிநெடிலடி | 6 | 18—20 | 6 எண்—திசுரம் |
| | | | | 7 எண்—மிசுரம் |

தொல்காப்பியர் ஒவ்வோர் அடிக்கும் எழுத்து அளவுகள் சொல்லியிருந்தாலும், அவர்காலத்திலேயே சீர் அளவே சிறப்பாகப் பெரும் வழக்காகி இருந்தது. (செய். 42).

| அடிவகை | இன்றுள்ள அடிப்படைத்தாள வாய்பாடு |
|---|---|
| குறளடி | தகதின தகதின |
| சிந்தடி | தகதின தகதின தகதின |
| அளவடி | தகதின தகதின தகதின தகதின |

பிறவும் இவ்வாறே. தகதின எனும் நால் எழுத்து இடைவிட்டு (ஒரீஇ வகையில்) தகதின—தாதின—ததீம்த போன்று பல வாறு வரும். இவை யாவும் தொல்காப்பியர் பின்னர் சுட்டுகின்றார்.

**13.** சின்மை அளவுகள் :

குறள், சிந்து, அளவு, நெடில், அறுமைக் கழிநெடில், எழுமைக் கழிநெடில் என்னும் கால அளவுகளில் சின்மை அளவும், பெருகியல் அளவுகளும் எழுத்து நோக்கிக் கொள்ளுவது இசைக் காலக் கணிப்பு முறையாகும். சின்மை அளவுகளைத் தொல்காப்பியர் ஓரிடத்துக் குறித்துப் பிறவற்றையும் கொள்ள வழிகாட்டியுள்ளார்.

“தன்சீர் எழுத்தின் சின்மை மூன்றே” (செய். 45) என்று வஞ்சியடி சின்மைக்கு எழுத்து எண்ணிக்கை காட்டியுள்ளார்.

குறள் சின்மை—2 எழுத்து—தக, கிட, தரி. இனி—நாலு எழுத்து ஒலி ஓர் எண்ணிக்கை எனில் மூன்று எழுத்துச் சின்மை $\frac{3}{4}$ ஆகும், 5 எழுத்துச் சின்மை—$1\frac{1}{4}$ ஆகும், 6 எழுத்துச் சின்மை $1\frac{1}{2}$ ஆகும். 7 எழுத்து $1\frac{3}{4}$ ஆகும். சின்மையை இசையில் காலப் படுத்துங்கால் பெருக்கிக் கொள்ளலாம்.

## =எழுத்துச்சின்மை வகை=

| | சின்மை வகை | எழுத்து | அளவு | முழவுச் சொல் |
|---|---|---|---|---|
| 1. | குறள் சின்மை | 2 | $\frac{1}{2}$ எண் | தக, தரி, கிட |
| 2. | சிந்துச் சின்மை | 3 | $\frac{3}{4}$ எண் | தகிட, திமித |
| 3. | அளவடிச் சின்மை | 4 | 1 எண் | தகதின, தரிகிட |
| 4. | நெடிலடிச் சின்மை | 5 | $1\frac{1}{4}$ எண் | தக தகிட, ததிகிடதொம் |
| 5. | அறுமைக்கழி நெடிலடிச் சின்மை | 6 | $1\frac{1}{2}$ எண் | தக தரிகிட |
| 6. | எழுமைக்கழி நெடிலடிச் சின்மை | 7 | $1\frac{3}{4}$ எண் | தகிட தகதிமி |

இவ்வாறு எழுத்தை "இசையொடு சேர்த்தி வகுத்தனர் உணர்த்தல் வல்லோர் ஆறே" (செய். 10) என்பதால் பெறப்படும்.

அசை, சீர் இவை—சற்றுப் பெருகிய கால அளவுகள். எழுத்து அளவு—சின்மை அளவு; சிறுமை அளவு. இதனை நீட்டுதல் வேண்டும் எனில் கூட்டி எழுதுதல் மரபாக இருந்தது.

"நீட்டம் வேண்டின் அவ்வள புடைய
கூட்டி எழூஉதல் என்மனார் புலவர்" —நூன்மரபு-6

**14. தொல்காப்பியர் காலத்துக் கால அளவை எழுதிய முறை:**

நான்கு எழுத்தை ஓர் எண்ணிக்கைக்குக் கொள்ளல் பொது மரபு. ஒரே எழுத்தை—இரண்டு எழுத்து அளவு நீட்டுதல் வேண்டும் எனில்—ப அ ($=\frac{1}{2}$ எண்ணிக்கை.) என்று கூட்டி எழுதினர். ப$=\frac{1}{4}$ எண்ணிக்கை. ப அ$=\frac{1}{2}$ எண்ணிக்கை. பஅஅ$=\frac{3}{4}$ எண்ணிக்கை. பஅஅஅ$=1$ எண்ணிக்கை; பஅஆ$=$ 1 எண்ணிக்கை. (ஈரளவு நெடில்$=$ஓரளவு குறில். நூன்மரபு 4,3)

| சங்க காலத்து எழுதும் முறை | இன்று எழுதும் முறை |
|---|---|
| பஅ | ப, $\frac{1}{4}+\frac{1}{4}=\frac{1}{2}$ எண் |
| பஅஅ | ப,, $\frac{1}{4}+\frac{1}{4}+\frac{1}{4}=\frac{3}{4}$ எண் |
| பஅஅஅ | ப,,, $\frac{1}{4}+\frac{1}{4}+\frac{1}{4}+\frac{1}{4}=1$ எண் |
| பாஆ | பா; ——$\frac{1}{2}+\frac{1}{2}=1$ எண் |

இயற்றமிழில்—கை நொடி மாத்திரை அளவு கொள்ளுதல் மரபு; இசைத் தமிழில் தாள எண்ணிக்கை அளவு கொள்ளல் மரபு. ஆதிதாளத்தை 'எட்டன்மட்டம்' என்று சிலப்பதிகார உரை கூறுவதால்—கையால் கொட்டியும், விரலால் எண்ணியும் கையை வீசியும்—எண்ணும் எண்ணிக்கைகளின் (வடமொழி—அட்சர காலம்) வழி இசையின் காலக் கணிப்பு அமையும். ஓர் எண்ணிக்கையை நான்கு கால் எண்ணிக்கையாகவும் எட்டு

அரைக்கால் எண்ணிக்கையாகவும், கொள்ளலே எழுத்துச் சின்மை அளவுகள்; சின்மை—சிற்றளவுத் தன்மை. இவை என்றும் எங்கும் உள்ள கால அளவுகளே.

## 15. முடிப்புரை

இதுகாறும் கூறியவாற்ருல் அறிவன: (i) தொல்காப் பியத்தில் இயற்றமிழ்ச் செய்யுள் செய்திகள்—இசைத் தமிழுக்கும் ஏற்ற வழி மாற்றிக்கொள்ளுமாறு தொல்காப்பியரே வழிகாட்டியுள் ளார் என்றும் (ii) இசைக்குக் காலக் கணக்கு மிகமிக முக்கியமானது, எலும்புச் சட்டகம் போன்றது என்றும் (iii) எழுத்துக்களை ஓரளவு இசைக்கும் குறில் என்றும் ஈரளவு இசைக்கும் நெடில் என்றும்—இவை எழுத்தின் அடிப்படை அளவுகள் என்றும், (iv) எழுத்து அளவுகள் இசையில் நீண்டு ஒலிக்கும் தன்மையன என்றும் (v) எழுத்துக்கள் சேர்ந்த அசைகள் இருவகை என்றும் அவற்றிற்கு இன்றுள்ள தாளவாய்பாடுகள் இவ்விவை என்றும் (vi) சீர் என்பது முதனிலைத் தொழிற் பெயர், அதன் பொருண்மை —ஏற்ற அளவாய் அமைந்த சொல் பகுதிகள் பண்டைச் சீர்வகைக்கு இன்றுள்ள தாளக் கட்டுச் சொல்கள் இவ்விவை; சீர்களாகிய எழுவகைத் தூக்குகளின் பெயரும் அவையோடு ஒப்பிட்டுக் காணத்தக்க இன்றைய இசை நடைமுறை அலகுகளின் வடசொல் தமிழ்ச் சொல்களும் இவ்விவை என்றும் (vii) அளவடியே—ஆதிதாளம் தோற்றுவித்து என்றும், அளவடிப் பிறப்பு வரலாறும் சிறப்பியல்புகளும் (viii) ஐவகை அடிகளின் சீர்களும் எழுத்துக்களும்—அவ்வடிகளுடன் ஒப்பிட்டுக் காணத்தக்க இன்று நடைமுறையில் உள்ள லகு வகைகளும் தாளச் சொல் கட்டுகள் இவ்விவை என்றும் (ix) எழுத்துச் சின்மைகளைப் பெருமை அளவினின்றும் கணிக்கும் முறைகளும் அவற்றிற்குரிய கால அளவு விழுக்காடுகளும் (x) தொல்காப்பியர் காலத்து நீண்டு ஒலிப்பதை எழுதிய முறையும் இன்றுள்ள முறையும் ஈதிது என்றும் ஒருவாறு சுருக்கமாக விளக்கப்பட்டன. இவற்ருல் தொல்காப்பியம் சுட்டும் இசைக் காலக் கணக்குகளின் வகை தொகை விளக்கப்பட்டன. அடுத்துத் தொல்காப்பியம் கூறும் இசைக் கருவிகள் பண் அமைப்புகளும் சங்க காலத்து இசைப் பாடல்களின் வகைகளும் பற்றி அறிவோம்.

### தொல்காப்பிய இசைக் குறிப்புவழி நூற்பாக்கள்

இசை வரலாறு

*1.* தென்னக இசையின் தொன்மை வரலாறு
தொல்காப் பியத்தில் தொடக்கம் கொள்ளும்

2. வாழும் இசையின் காலக் கணக்கும்
யாழும் பறையும் ஆதிய கருவிகள்
பாணர் வாழ்க்கைப் பண்பின் சிறப்பும்
பாணி வகையும் பரிப்பா வரிப்பா
பூணும் கலிப்பா முதலிய இசைப்பா
காண இயம்பும் தொல்காப் பியமே.

எழுத்து அளவு

3. ஓரளபு இசைக்கும் குற்றெழுத் தெல்லாம்
ஈரளபு இசைக்கும் நெட்டெழுத் தெல்லாம்

4. நீட்டம் வேண்டில் கூட்டி எழுதல்
பாட்டில் உண்டே பண்டை முதலே.

5. குறுக்கம் வேண்டில் உருட்டி ஒலித்து
குறுக்க அளவு கொள்ளும் எழுத்து.

6. முதல்நடை வாரம் கூடை திரள்என
இதமுறச் செல்லும் நால்வகைச் செலவே.

7. எண்ணிக்கை ஒன்றுக்கு நாலெழுத் தாக்கிப்
பண்ணுவர் காலளபு ஓரெழுத் தினுக்கே.

8. எண்ணிக்கை ஒன்றுக்கு எட்டெழுத் தொலித்து
பண்ணுவர் அரைக்கால் ஓரெழுத் தினுக்கே.

அசைவகை

9. அடிப்படை நேரசை நிரையசை இருவகை.
அவைவழி அமைத்தனர் பிறவகை அசையே.

10. நேர் நேர்—தாதிம்
நிரை நேர்—தகதிம்
நேர் நிரை—தாங்கிட
நிரை நிரை—தகதின
எனவே சொற்கட்
டிணைக்கத் தகுமே.

11. எண்ணிக்கை ஒன்றுக்கு நாலெழுத் தாக்கிப்
பண்ணுவர் சின்மை அளவு காலென.

12. ஓரெழுத்துக்குக் காலள வாகும் (த—$\frac{1}{4}$)
ஈரெழுத்துக்கோ அரைஅள வாகும் (தக—$\frac{1}{2}$)
மூவெழுத்துக்கு முக்கா லாகும் (தகிட—$\frac{3}{4}$)
நாலெழுத்துக்கு ஒன்றெனக் கொள்க (தகதின—1)
ஐந்தெழுத்துக்கு ஒன்றே காலாம் (தகதகிட—$1\frac{1}{4}$)
ஆறெழுத் துக்கு ஒன்றரை யாமே (தகதரிகிட—$1\frac{1}{2}$)
ஏழெழுத்துக்கோ ஒன்றைய முக்கால் (தகிடதகதின—$1\frac{3}{4}$)
மன்னும் நேரள வடிப்படை ஆகில்
சின்மை அளவு காலெனக் கொள்க.

குறிப்பு: இந்நூற்பாக்களை ஆக்கியோர் பேராசிரியர் வி. ப. கா சுந்தரம்.

---

# ‘செயற்பாலன’

[பேராசிரியர் ஏ. ஆர். முத்தையன், எம்.ஏ., எம்.லிட்.]

“செயற்பால தோரும் அறனே ஒருவற்(கு)
உயற்பால தோரும் பழி” (குறட்பா 40)

என்பது வள்ளுவர் வாய்மொழி. ஒருவன் செய்தற்குரியது நல்வினை; விலக்க வேண்டுவது தீவினை என்பதே கருத்தாகும். பழித்தற்குரியது பழி எனப்பட்டது.

இச் செய்யுளில் வரும் ‘பாலது’ என்பதற்குப் பான்மை (தன்மை) யது எனப் பொருள் கூறுவர் பரிமேலழகர். திருக்குறளுக்கு முதல் உரையாசிரியராகக் கருதப் பெறும் மணக்குடவரோ, ‘பால்’ என்பதற்குப் ‘பகுதி’ எனப் பொருள் காண்பர். அறத்துப்பால் விருத்தியுரை கண்ட நாகை. தண்டபாணியார் இன்னும் சற்று விளக்கமாக, “நல்வினை தீவினை என்னும் வினைப் பகுதிகள் இரண்டனுள்” எனக் கூறிப் ‘பால்’ என்பதற்குத் தாம் கொண்ட ‘பகுதி’ என்ற பொருளைத் தெளிவு படுத்துவர்.

இக் குறட்பாவில் இடம்பெறும் ‘ஓரும்’ என்பன இரண்டும் அசைநிலை யென்பர் பரிமேலழகர். விருத்தியுரைகாரரும் இக் கருத்தையே ஏற்றுக்கொள்வதுடன்,

“அஞ்சுவ தோரும் அறனே ஒருவனை
வஞ்சிப்ப தோரும் அவா” (குறட்பா 366)

என்ற குறட்பாவையும் எடுத்துக்காட்டி, நச்சினார்க்கினியரைத் தழுவி, “கிளந்த அல்ல”, (தொல்-சொல்-இடையியல் 48) என்னும் புறனடை நூற்பாவால் கொள்ளப்படும் என இலக்கண அமைதியுங் காட்டுவர்.

(தொல்காப்பியர் காலத்தே புறனடையாற் கொள்ளப்பட்ட ‘ஓரும்’ என்ற அசைநிலை, காலத்தால் மிகப் பிற்பட்டவராகிய பவணந்தியார் காலத்தே, [“யாகா” எனத் தொடங்கும் நன்னூல் (441) இடையியல் இறுதி நூற்பாவில்] அசைநிலைக்குரிய இடைச் சொல்லாகவே சேர்த்துக் கூறப்பட்டுள்ள தென்பது கருதற்குரிய தாம்.)

வள்ளுவத்திற்கு உரைவகுத்த பதின்மருள் ஒருவராகக் கருதப்பெறும் காளிங்கரோ, ‘ஓரும்’ என்பதற்கு ஓர்தல், ஆராய் தல் எனப் பொருள் கொண்டு “ஆராய்ந்து கொண்மின்” எனக் கூறுவர். இங்ஙனமாக உரைகாண்பார் மதிநுட்பத்திற்கேற்பப்

பொருள் நுட்பஞ் சிறந்து விளங்குவன வள்ளுவர் பாக்கள் என்பது அறிஞர் பலரும் அறிந்த ஒன்றேயாம்.

பிற்கால நூலாசிரியர் போன்று, சாதி சமயச் சழக்கிற்குச் சிறிதும் இடந் தராது, எச்சமயத்தவர்க்கும், எந்நாட்டினர்க்கும், எக்காலத்தவர்க்கும் ஒப்பமுடிந்த நெறிமுறைகளையே வடித்தமைத்த நூலாகும் வள்ளுவம். அவ்வாறிருப்பவும், "சமய கோடிக ளெலாம் தந்தெய்வம் எந்தெய்வம் என்று எங்குந் தொடர்ந்தெதிர் வழக்கிட்'' டாற்போன்று, அருகர், சைவர், வைணவர் ஆகிய சமய வாதிகளெலாம், தத்தம் சமயத்தவரே வள்ளுவர் எனப் பெருவழக் கிட்டு மலைவுறல் இரங்கற் பாலதேயாம்.

காந்தியடிகளாரின் சிறப்பைப் புலப்படுத்த எண்ணிய காந்திப் புராணமுடையார்,

"மேனாட்டார் ஏசுவென வியந்துருக்கர் நபியென்ன
விளங்கும் இந்த
மாநாட்டார் மொழிந்த மொழிப்படி மாலின்
வரவே யென்ன''

எனக் கூறுவர். அஃதாவது காந்தியடிகளாரின் குணநலன்களைக் கண்டு வியந்த மேலைநாட்டார்—கிறித்தவர்கள்—அடிகளார் ஏசு நாதரின் மறுபிறப்பே யென்பர்; முகம்மதியர், அடிகளார் தங்கள் சமயத்தைத் தோற்றுவித்த நபிகள் நாயகமாமென்றே கூறுவர்; வைதீக சமயத்தின் ஒரு பிரிவினரோ, "உலகில் அநீதி பெருகுங் கால், நான் மீண்டும் பிறப்பேன்" எனக் கூறிய கண்ணன் அவதாரமே யென்பர் என்று கூறி அடிகளாரைச் சிறப்பிப்பர். இதில் தென்னாடுடைய சிவனே, மைவரை மேய சேயோனே குறிக் கப்படாதது கருதற்குரியதாம். அஃது ஆசிரியர் மரபுபோலும்.

கிறித்தவர்களுக்கு வேதாகமமும், முகம்மதியர்களுக்குக் கொரா னும், திருமாலடியார்க்குப் பகவத்கீதையும் உளதேபோல் தமிழர்க் குரிய தனிநூலொன்றும் இல்லையோ எனின், உளது; உளது, ஐயமற வுளது. அதுவே வள்ளுவம்; வள்ளுவம். இதனைத் "தேவர் குறளும்,'' எனத் தொடங்கும் பழம் பாடலே புலப் படுத்தும்.

குறைந்த அளவு இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னரே தலைசிறந்த பல இலக்கிய இலக்கண நூல்களைப் பெற்றுள்ள தமிழ் மொழி அதற்குப் பன்னூருண்டுகட்கு முன்னரே தோன்றி, வளர்ந்து செம்மை பெற்றிருக்க வேண்டுமென்பது கூறாமலே விளங்கும் ஒருண்மையாம். இதனை உளங்கொண்டே,

''வைய மீன்றதொன் மக்க ளுளத்தினைக்
கையி ஞலுரை கால மிரிந்திடப்
பைய நாவை யசைத்த பசுந்தமிழ்
ஐயை தாள்தலை கொண்டு பணிகுவாம்''

என அன்னைத் தமிழை வாழ்த்தி மகிழ்வர், பள்ளியகரப் பழங் கதை புனைந்த அறிஞர் நீ. கந்தசாமிப் பிள்ளையவர்கள்.

தொன்மை வாய்ந்த செந்தமிழ் இலக்கியங்கள் பலவற் றுள்ளும் தலைமை பெற்று விளங்குவது திருக்குறளே என்பதையும் மேற்காட்டிய பழம்பாடலிலமைந்த வைப்பு முறையே தெள்ளிதின் விளக்கும்.

இந்திய விடுதலைப் போர் தோன்றி, வளர்ந்து, காட்டுத்தீ யென நாடெங்கணும் பரவி வருதல் கண்டு அஞ்சி நடுங்கிய ஆங்கில அரசாங்கம் அதற்கொரு முடிவு காண்பான் வேண்டி அழைத்த முதல் வட்டமேசை மாநாட்டிற்கு, இந்தியப் பேராயக் கட்சியின் (தேசீய காங்கிரசின்) சார்பாகக் காந்தியடிகள் ஒருவரே சென்றதை உலகறியும்.

அத்தகு காந்தியடிகளார் திருக்குறளைப் பற்றிக் கூறுங்கால் ''கி. பி. முதல் நூற்றாண்டில் வாழ்ந்தவராகச் சொல்லப்படும் திருவள்ளுவர், தமிழ் மறை எனத் தமிழராற் போற்றப்பெறும், புனித கோட்பாடுகளடங்கிய புகழ் பெற்ற திருக்குறளை இயற்றி யுள்ளார்,'' என வாயாரப் புகழ்ந்து கூறியுள்ளார்.

விடுதலை இயக்கத்தைச் சேர்ந்த தலைவர்கள் பலரிருப்பவும், காந்தியடிகளார்க்கே தலைமை வாய்த்ததுபோல், அடிகளாரால் புகழ்ந்துரைக்கப்பெற்ற திருக்குறளும், செந்தமிழ் நூல்கள் பலவற்றுள்ளும் தலைமை பெற்று விளங்குகிறதெனக் கோடல் பிழையன்றே. உலக மொழிகள் பலவற்றுள்ளும், இதுகாறும் ஏறக்குறைய எண்பதுக்கு மேற்பட்ட மொழிபெயர்ப்புகள் வந்துள்ளமையே இதனைத் தெளிவுறுத்தும்.

கிறித்தவர்கள் பைபிள் என்னும் விவிலிய நூலுக்குக் கொடுக்கும் சிறப்பையும், முகம்மதியர் கொரானுக்குக் கொடுக்கும் சிறப்பையும் காணும் நாம், சமயச் சார்பற்று, அவர்களும் போற்றத் தக்க, பொதுநெறி நூலாகிய வள்ளுவத்தை—உலகியற்கு வேண்டும் எல்லாப் பொருளையுந் தன்பாற் கொண்ட வள்ளு வத்தைப் போற்றுகின்ருேமா? இல்லையே! ஞாயிறுதோறும் வேதாகமத்தைக் கைக்கொண்டு, கோயிலுக்குச் செல்லும் கிறித்த

வர்கள் போன்று, திங்கள்தோறுமாவது திருக்குறளைக் கையிற் கொண்டு செல்லுதற்கான செயல் ஏதேனும் செய்துள்ளோமா? இல்லையே? இனியேனும் இதற்கெனச் செயற்பாலனவற்றைக் காண்போமாக.

பட்டி தொட்டிகளிலும், திங்கள்தோறும் திருக்குறட் சொற் பொழிவு நிகழ்தல் வேண்டும்.

மாணவர்கட்குப் பரிசு வழங்குங்கால், திருக்குறள் நூல் ஒன்றனையும் சேர்த்து வழங்கவேண்டும்.

வேதாகம நூல் கொடுக்கப்படுவது போன்று, இளங்கலை, முதுகலைப் பட்டம் பெறுவோர்க்குத் திருக்குறள் நூலை வழங்கல் வேண்டும்.

அரசு பணிமனைகளிலும், அரசு போக்குவரத்து ஊர்திகளிலும் தெரிந்தெடுத்த குறட்பாக்களையோ, அல்லது, "செயற்கரிய செய்வார் பெரியர்," "மங்கலம் என்ப மனைமாட்சி," "மறவற்க மாசற்றார் கேண்மை," "தீயவை தீயினும் அஞ்சப் படும்," என்பன போன்ற குறட்பாத் தொடர்களையோ எழுதுவிக்க வேண்டும்.

எல்லாவற்றிற்கும் மேலாகத் தமிழக அரசு அலுவலர்க்கான தேர்வுகளில் (T.N.P.S.C. Exam). திருக்குறளையும் தேர்வுக்குரிய பாடமாகச் சேர்த்து, தனி வினாத்தாளையும் அமைத்தால், அரசு அலுவலகம் எங்கணும் திருக்குறள் மணங்கமழும் என்பதில் ஐயமின்றாம். இத் திட்டம் அரசு அலுவலர் யாவரும் திருக்குறள் பயிலும் வாய்ப்பைப் பெறவேண்டும் என்பதற்காகவே அமைந்தது என்பதைக் கருத்திற் கொண்டு, எளிய முறையிலேயே வினாத்தாள் இருத்தல் வேண்டும். பத்தாம் வகுப்பு, உயர் நிலை வகுப்பு தேர்வு பெற்றவர்களுக்கான தேர்விற்கு அறத்துப்பாலும், இளங்கலை, முதுகலைப் பட்டம் பெற்றவர்க்கான தேர்விற்குப் பொருட்பாலும் பாடத்திட்டமாக வகுப்பது நலமாக அமையலாம்.

அறிஞர் குழு ஒன்றை அமைத்து இதுகாறும் வெளி வந்துள்ள உரை நூல்கள் எல்லாவற்றையும் ஒப்பு நோக்கி இன்றியமையாத இலக்கணக் குறிப்பு முதலியவற்றுடன் சிறந்த விளக்க உரை ஒன்றை வெளியிட வேண்டும்.

சில்வகை எழுத்திற் பல்வகைப் பொருளையும் செறித் தினி தமைத்த தெள்ளுதமிழ் வள்ளுவத்தை, தேனை, பாலை, தீங்கனிப் பிழிவை, ஆராவமுதாய் அள்ளிப்பருகி, தெருவெல்லாம் குறள் முழக்கம் செழிக்கச் செயற்பாலனவெல்லாம் செய்வோமாக.

———

# நரியைக் குதிரை செய்வான்

[நக்கீரன் வழியடிமை. புலவர். பி. மா. சோமசுந்தரனுர்,
இராணிப்பேட்டை]

(முன் இதழ் கஉகூஆம் பக்கத் தொடர்ச்சி)

ஒரு பாடற்கண் வரும் ஒரு தொடர் வரலாற்றைச் சுட்டுவதாயின் அப் பாடற்கண் வரும் ஏனைய தொடர்களும் வரலாறுடையனவாகவே இருத்தல் வேண்டும் என்ற இலக்கணம் இன்னோர் யாண்டுப் பெற்றனரோ அறிகிலம். அவ்வாறே இயன்ற பாடல்கள் பலவற்றைக் காட்டலும் இவர்தம் கடன்மையே ஆகும். அன்றியும்,

''கொங்கினு மரும்புவைத்தார் கூற்றங்கள் கெடுக்கவைத்தார்
சங்கினுண் முத்தம்வைத்தார் சாம்பரும் பூசவைத்தார்
அங்கமும் வேதம்வைத்தா ராலமு முண்டுவைத்தார்
கங்குலும் பகலும்வைத்தார் கழிப்பாலைச் சேர்ப்பனுரே''

எனநிகழ் நாவரசுகள் பாடற்கண் ஒப்புமைக் கூட்டமாக வரும் ஏனைய தொடர்கள் வரலாறு குறியாமையின் 'ஆலமும் உண்டு வைத்தார்' என்பதும் வரலாறு குறியாதென்பீரோ என மறுக்க. இவ்வண்ணமே,

''இரப்பவர்க் கியவைத்தா ரீபவர்க் கருளும்வைத்தார்
கரப்பவர் தங்கட்கெல்லாங் கடுநர கங்கள்வைத்தார்
பரப்புநீர்க் கங்கைதன்னைப் படர்சடைப் பாகம்வைத்தார்
அரக்கனுக் கருளும்வைத்தா ரையனை யாறனுரே''

எனநிகழ் நாவரசுகள் பாடலில் ஒப்புமைக் கூட்டமாகவரும் ஏனைய தொடர்கள் வரலாறு குறியாமையான் 'கங்கையைச் சடையிற் கொண்டதும் அரக்கனுக் கருளியதும் வரலாறுணர்த்தா என்பீரோ' என்க. முன்பு காட்டிய 'வக்கிரனுயிரை' என்ற பாடற்கண் வரும் சக்கரம் அருளியதும் 'மாயிருஞாலம்' என்ற பாடற்கண் ஞான போனகர்க்குப் பொருள் அருளியதும் வரலாறுகள் என்று கொண்டு போற்றும் இன்னோர் நரியைக் குதிரை செய்வான் என்பது வரலாருகாது என வழக்கிடல் ஒவ்வாததே.

இதனுல் ஒரு தொடர் வரலாறு குறிப்பதாமேல் அப் பாடற்கண் வரும் ஏனைய தொடர்களும் வரலாறு குறிப்பனவாதல் வேண்டுமெனல் இன்னோர் கற்பனையில் உதித்த இலக்கணமேயன்றி அடிப்

படைச் சான்றோரின் வழக்கில் நிலவுவதன்று எனல் தெளியப்படும். தெளியப்படவே, இன்னோர் வழக்கும் வழுவுடையதாய் ஒழிவதே என்பதும் பெறப்படு மென்க.

## 5. நரியைக் குதிரை செய்வான்—தொல்லாசிரியர் கண்ட பொருள்

நரியைக் குதிரை செய்வான் என்ற தொடருக்கு ஏறக்குறைய ஆயிரம் ஆண்டுகட்கு முன்பு இருந்த ஆசிரியன்மாரும் திருவாத வூரடிகளுக்காக மிழலை நாட்டுக் காட்டிலே திரியும் நரிகளை யெல்லாம் குதிரைகளாக்கிக் காட்டிய திருவிளையாடலைச் செய்தவன் என்றே பொருள் கண்டனர் என்பதையும் காட்டுவாம்.

திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம் இயற்றியவர் பெரும்பற்றப் புலியூர் நம்பியாவார். இவர் காலம் பன்னிரண்டாம் நூற்றாண்டின் முற்பகுதி அல்லது பதினொன்றும் நூற்றாண்டு ஆம். தேவார திருவாசகங்களில் இவர் ஆழ்ந்த பயிற்சி உடையவர். தாம் கூறும் வரலாறுகளிலுறும் ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் அருளப்பட்ட தேவார திருவாசகப் பதிகங்களை இவர் குறித்துச் செல்லலும் உளங்கொளற் பாற்று. இப் பெரியார் சிவபிரான் நரிகளைப் பரியாக்கிய நிகழ்ச்சியை உரைக்கப்புக்கு,

*"மின்னிய அலகு தன்னில் வித்தின்றி நாறு செய்வோன்*
*நன்னெறி யில்லாப் பொல்லா நரகரைத் தேவு செய்வோன்*
*மன்னிய நரிக டம்மை மறுகெலாம் வாவி யேறித்*
*தென்னன்முன் குதிரை யாகச் செய்புதோன் றுமல் விட்டான்"*

என்று இசைப்பாராயினர். இப் பாடல் 'நரியைக் குதிரை செய்வானும்' என்ற நாவரசர் பாடலைப் பின்பற்றி எழுந்ததே என்பது சொல்லாமலே விளங்கும். அத்துடன் 'நரியைக் குதிரை செய்வானும்' என்ற தொடர் நரிபரியாக்கிய திருவிளையாடலைக் குறித்த தென்றே நம்பியும் அவர்க்கு முன்னிருந்த ஆசிரியன்மாரும் போற்றிவந்தனர் என்பதும் விளங்கும். மணிவாசகர் ஒன்பதாம் நூற்றாண்டினராயின், பத்து, பதினொன்றும் நூற்றாண்டில் வாழ்ந்த அறிஞன்மார் இங்ஙனம் மயங்கிப் பொருள் கொள்ளார் என்பதும் முடிவிலாற்றலுடைமையை இத் தொடர் குறிப்பதாகக் கருதும் இந் நாட் புலவன்மாரே மயங்கிப் பொருள் கொள்ளலாயினர் என்பதும் பெறப்படும்.

பன்னிரு திருமுறை வரலாறுடையார் சம்பந்தர், அப்பர், சுந்தரர், மணிவாசகர் என்று வழங்கும் முறை அவர்கள் திருவடி நீழலெய்திய கால அடைவை ஒட்டியதென்றும், அப்பரை முதலில்

வைத்துக் கூறும் முறை அவர்கள் தோன்றிய கால அடைவை ஒட்டியதென்றும் கூறுவார். இக் கூற்று நூலாசிரியர் தம் கற்பனையே அன்றி உண்மையன்று. நம் முன்னோர் வரலாற்றுணர்வில் இத்துணை ஊக்கம் காட்டியிருந்திருப்பின் தமிழ்நாட்டு வரலாறும் தமிழ்ப் புலவர் வரலாறும் எத்தகைய இடர்ப்பாடுமின்றி நாம் பெற்றிருப்போம். கோயில்களில் நால்வர் வைப்புமுறை பஃறிறமாக இருத்தலும் காண்க.

தஞ்சை சீனிவாசபிள்ளையவர்கள் "நீண்டகால பரம்பரை வழக்கிற்கு விரோதமாய் வாதவூரடிகள் தேவாரம் பாடிய மூவர்க்கும் முந்தியவர் என்பது பொருத்தமுடையதன்றும்" என்பது அடிப்படையே இல்லாக் கூற்று என்பதை முன்காட்டிய நம்பியின் பாடலே நனிகாட்டும். மேலும் மாணிக்கவாசகர் தேவார ஆசிரியன்மார்க்குப் பிற்பட்டவர் என்ற கருத்தே நீண்டகால பரம்பரை வழக்கிற்கு மாறுபடுவது என்பதும் காட்டுவாம்.

(அ) Tradition places him in the fifth century, earlier than the writers of Devaram, but the opinion of scholars seems to be converging on the view that he lived in the later half of the ninth or the first half of the tenth century of our era. (Hymns of Tamil Saivite Saints by F. Kingsbury, B.A., (Madras) and G. E. Philips, B.A. (Lond.), M.A. (Oxon).

(ஆ) சிறிது காலத்திற்குமுன்வரை சுவாமிகள், வாகீசமூர்த்திகள், ஞானசம்பந்தமூர்த்திகள், சுந்தரமூர்த்திகளாகிய மூவருக்கும் முந்தியவர் என்ற கொள்கையே நிலவிவந்தது. இப்பால் சில வருஷங்களாக அக்கொள்கை நிற்கச் சுவாமிகள் மூவர்க்கும் பிந்தியவர் என்ற கொள்கை பரவிவருகின்றது.

(சிவக்கவி மணியவர்கள்—மாணிக்கவாசகர்).

மேற்காட்டிய இருவரின் கருத்தும் உண்மையே என்பதை நம்பியின் பாடலே நிறுவும். மேலும் சில காட்டுவாம்.

(அ) அம் மாணிக்கவாசகனுர் நிமித்தம் சிவபெருமான் நரியைப் பரியாக்கி யருளிய திருவிளையாடலை நாவுக்கரசுகள் திருவாரூர்த் தேவாரத்தில் "நரியைக் குதிரை செய்வானு நரகரைத் தேவு செய்வானும்" என்றருளிச் செய்தலின்

அவ்வரசுகட்கும் அவரோடெழுந்தருளியிருந்த ஸ்ரீஞான சம்பந்த சுவாமிகளுக்கும் முற்பட்ட காலத்தே யுள்ளார் அம் மாணிக்கவாசகனுர் என்க.

(பாம்பன் தவத்திரு. குமரகுருதாச அடிகளார்—சைவசமய சரபம்).

(ஆ) ஆளுடைய பிள்ளையார் வாகீசர் தேவார ஒத்துக்கள் முடத்திருமாறன் காலத்தும்..........வாதவூரடிகள் திருவாசகந்திருக்கோவை என்னும் ஒத்துக்கள் அரிமர்த்தன வழுதி காலத்தும் அவதரித்தன. அரிமர்த்தன வழுதி முடத்திருமாறன் முற்றேன்றலாயுள்ளான். அது ஆலவாய்ப் புராணத்துட் காண்க. ‘நரியைக் குதிரை செய்வானும்’ என்னும் வாகீசர் திருவாக்கும் இதற்குறு சான்ருதலறிக.

(யாழ்ப்பாணம் சபாபதி நாவலர்—திராவிடப்பிரகாசிகை).

(இ) தமிழ் வேதத்துள் முற்பட்டது திருவாசகமே. அது முதல்வனுல் எழுதப்படுதலானும் திருஞானசம்பந்த சுவாமிகளின் சமகாலத்தவரான திருநாவுக்கரசு பெருமான் ‘நரியைக் குதிரை செய்வானு’மென்று அருளிச் செய்திருத்தலானும் பிறவாற்ருனும் தமிழ் வேதம் முதல் முதல் தோன்றியது சீகாழி என்றது பொருத்தமற்றதேயாம்.

(ம. தி. பானுகவி—இராமலிங்கபிள்ளை பாடல் ஆபாச தர்ப்பண கண்டன நியாய வச்சிர குடாரம்).

(ஈ) இதனுல் ஸ்ரீ மாணிக்கவாசக ஸ்வாமிகள் திருநாவுக்கரசு நாயனுர்க்குக் காலத்தால் முந்தியவரென்று நன்கு புலப்படுதல் காண்க.

(உ. வே. சாமிநாதையர்—திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம்),

6. நரகரைத் தேவு செய்வான் முதலியன

“நரகரைத் தேவு செய்வான் என்பது பாவிகளையும் புண்ணியராக்கும் இயல்பைக் குறித்தவாருகும். அதற்கு எடுத்துக்காட்டாகக் கண்ணப்பர் வரலாற்றைக் கூறலாகும். அவரது வரலாற்றை இத் தொடரில் கூறினுர் என்ருல் சாலாது” என்பது கவியரசு நடேச

கவுண்டர் அவர்கள் கூற்று. இக் கூற்று கண்ணப்பரைப் பாவி களில் ஒருவராகக் கணக்கிடுகிறது. நக்கீரர்பெருமானும், சமய குரவன்மாரும் ஏத்திய பெருமையுடைய கண்ணப்பர் பெருமானை— கலைமலிந்த சீர்நம்பியை இவ்வாறு கருதவும் நெஞ்சம் நடுக்குறுதா? கண்ணப்பரை நரகர் வகுப்பில் படுத்தும் இப் பெரியார் எம்போலி யரை எவ்வகுப்பில் படுத்துவரோ அறிகிலம். இத் தொடர்க்கு வர லாறு கூறவேண்டுமென்ற கட்டாயத்தால் தாயைப் புணர்ந்த ஒரு பார்ப்பன இழிமகன் கதையை மறைமலையடிகளார் குறிப்பிட்டாரே யன்றி அஃதே அப்பர் பெருமான் திருவுளம் என்று கொள்ளற்கு எட்டுணைச் சான்றுமின்று. இத் தொடரின் விளக்கமாக,

> "இருடரு துன்பப் படல மறைப்பமெய்ஞ் ஞானமென்னும்
> பொருடரு கண்ணிழந் துண்பொரு ளுடிப் புகலிழந்த
> குருடருந் தம்மைப் பரவக் கொடுநர கக்குழிநின்
> றருடரு கைகொடுத் தேற்றுமை யாற னடித்தலமே"

எனவரும் அப்பர் பெருமான் திருமொழியே அமைந்திருத்தல் கண்டின்புறற்பாலது.

விரதங்கொண்டாட வல்லான் என்ற தொடர்க்கு "இருவினைப் பாசத்தாற் கட்டுண்டு மயங்கும் மாந்தரைத் தவநெறியிற் புகுத்திச் சிவஞானத்தை யளித்தல் கருதி அவர்பொருட்டு எண்ணிலாத விரத நெறிகளைத் தானே மேற்கொண்டு அருள்புரியவல்ல விரதியாக விளங்கு பவன்" என்பது திரு. வெள்ளைவாரணனர் அவர்கள் தரும் விளக்க மாகும். இறைவன் எண்ணிலா விரத நெறிகளை மேற்கொண்டவன் என்று எந்நூல் விளம்புகிறதோ அறிகிலம். அன்றியும் பதஞ் சலியும் புலிக்காலரும் காண எம்பிரான் திருக்கூத்தியற்றிய வர லாற்றையும் இத் தொடர் குறித்ததெனல் ஒவ்வாது. விரதம் என்பது தவம் என்று பொருள்படும். 'தவமென்ப விரதம் நோன்பா முவவொடு தவசுமாகும்' என்பது சூடாமணி நிகண்டு. ஆகலான்,

> "சேவி னேரன கண்ணிவெண்ணகை மான்விழித்
> திருமாதைப் பாகம்வைத்
> தேல மாதவ நீமுயல் கின்றவேடமிதென்" (திருவாமாத்தூர்)

எனப் புகலியர்கோன் அருளிச் செய்த திருமொழியே 'விரதங் கொண்டாட வல்லான்' என்ற தொடர்க்கு அமையும் நல்விளக்க மாகும் என்க.

விச்சின்றி நாறுசெய்வான் என்பதன் பொருள் பின் வருமாறு :

"விச்சதின்றியே விளைவு செய்குவாய்' என்னுந் திருவாசகம் விருக்கந்தான் முன்னர் உற்பத்தி செய்யப்பட்டது என்பதைக் காட்டற்கு ஏதுவாய் இருத்தல் என்னையெனின்—நன்றுகடாயினுய்! வித்து, கிழங்கு முதலிய பீசங்களைக் கொண்டு தாவர வர்க்கங்களை மனிதர் வேறுற நின்று உண்டு பண்ணுமாறு எதனையும் செய்யாமல் தனக்கு வேறுபடா நிலைக்களத்தே யாவையுந் தோற்றுவிக்கும் மகத்துவ சத்திமானும் நீ எனும் பொருள்தரும் அஃது அத்திற ஏது ஆக மாட்டாது என்க."

(பாம்பன் குமரகுருதாச அடிகளார்—பரிபூரணனந்த போதம்)

7. முடிப்புரை

இதுகாறும் கூறியவற்ருல்

(அ) மாணிக்கவாசகருக்காக இறைவன் நரிகளைப் பரிகள் ஆக்கிய திருவிளையாடலைச் சுட்டியே நாவுக்கரசர் பெருமான் 'நரியைக் குதிரை செய்வானும்' என்று போற்றியருளினர் என்பதும்

(ஆ) இவ்வாறே ஆயிரம் ஆண்டுகளாக அறிஞன்மார் பொருள் கண்டு வந்தனர் என்பதும்

(இ) இவ்வாறு பொருள் கோடலை மறுப்போர் அண்மைக் காலத்தவரே என்பதும்

(ஈ) இந்த மாறுபாடு கொள்ளும் இன்னோர் நாவரசர் பாடலுக்கு உரிய பொருள் கூருமல் தத்தமக்குத் தோற்றியவாறே பொருளுரைத்துத் தம்மிலேயே மாறுபட்டனர் என்பதும் இன்னோர் பல்வகையாகப் பொருள்கூற முற்படினும் அவர் உரை பொருளுரையாகா என்பதும் நன்கு நிறுவப்பட்டன.

இன்னோர் மாணிக்கவாசகர் தேவார ஆசிரியன்மார்க்குப் பிற்பட்டவர் என நிறுவுதற்குக் காட்டும் ஏனைய காரணங்களையும் எமது அடுத்த கட்டுரையில் ஆராய்ந்து முடிவு காண்பாம்.

———

# ஓரி

[கழக இலக்கியச் செம்மல், புலவர் இரா. இளங்குமரன்]

பண்டைத் தண்டமிழ் வாணர்களால் வள்ளல்களாகச் சிறப்பிக்கப்பெற்ற எண்மருள் ஒருவன் ஓரி; அவன் கொல்லி மலைக் கோமான்; வில்லாண்மைச் சிறப்பால் 'வல்வில் ஓரி' என வழங்கப்பெற்றவன்; 'ஆதன் ஓரி' என்று சுட்டப்பெற்றவன்; படைகொண்டு வந்த முள்ளூர் மன்னன் காரியொடும் பொருது புகழுடம் பெய்தியவன். இவனுக்கமைந்த ஓரிப் பெயர்க் கரணியம் காண்போம்.

'ஓர்' என்னும் முதனிலையுடன் 'இ' என்னும் இறுதிநிலை இணைந்த பெயரே இது. ஒன்று என்பது ஓர் என்றும் ஒரு என்றும் வருதல் தொல்பழ வழக்கே. (தொல். எழுத். 437, 438). 'ஒன்று' என்பது 'ஒன்று' என்னும் எண்ணுப் பெயராவதுடன், 'ஒரு பேராற்றலைக்' குறிப்பதாகவும் வழங்கி வருகின்றது. 'உலகத்தை ஒன்று இயக்குகிறது' என்பது உலகளாவிய கொள்கை. அந்த ஒன்றற்கு உருவம் தர விரும்பியவர்கள் 'ஒருவன்' ஆக்கினர். 'ஒருவன் துணை', 'ஒருவனே தேவன்', 'ஒருவன் பார்த்துக் கொண்டே இருக்கிறான்' என்னும் இருவகை வழக்குகளையும் கருதுவார் ஒருவன் எனப் பெறுபவன் 'இறைவன்' என்பதை அறிவர்.

'ஒன்று' எனப்பெறும் எண், 'முதல்' எண்; 'ஆதி எண்' என்பதும் அது; ஆதலால் இறைவன் 'முதல்' 'முதல்வன்' 'ஆதி பகவன்' 'ஆதி' என வழங்கவும் பெற்றான். மேலும் 'நான், நீ' என்னும் தன்மைப் பெயரும் முன்னிலைப் பெயரும் ஒழிந்த, படர்க்கை ஒருமைப் பெயராகிய 'அவன்' என்பது, வழிநிலைப் பெயர்ச் சொல்லாக வாராக்கால், இறைவனையே குறித்தலும் வழக்கு. 'அவன் இருக்கிறான்' 'அவன்மேல் பாரத்தைப் போட்டுவிட்டு ஆவதைச் செய்யுங்கள்' என்பனவெல்லாம் வழக்கில் உள்ளனவே. 'அவனன்றி அணுவும் அசையாது' என்று சொல்லாதவர் இல்லை.

'ஒன்று' என்பது ஒன்றுவிக்கும் ஊழைக் குறிப்பது தொல் காப்பியத்தால் அறியப்பெறும். தலைவனையும் தலைவியையும் ஒன்றுபடுத்தும் ஊழ், தலைப்பட்டுச் செயலாற்றுகிறது. அதனை,

"ஒன்றே வேறே என்றிரு பால்வயின்
ஒன்றி உயர்ந்த பால தாணையின்
ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப"

என்பார். (தொல். பொருள். களவு. 2)

ஒன்று, ஒன்றித்து இருத்தலாம் ஒற்றுமையையும் குறிக்கும். 'ஓர்' 'ஒரு' என்பவையும் எண்ணுப் பெயர்களாதலோடு, ஒப்பின்மை, ஒப்புமை உருபு, தனிமை ஆகிய பொருள்களேயும் தரும்.

"ஒரு தனி ஆழி" (சிலப். 27. 136)

"உருவப் பல்பூ ஒருகொடி வளைஇ" —(நெடுநல். 113.)

"ஆனின் னகரமும் அதனோர் அற்றே" (தொல். எழுத். 124)

"ஒருதானாகிப் பொருதுகளத் தடலே" (புறம். 76)

ஓர் என்பதன் வழியாக ஓர்தல், ஓர்ப்பு, ஓர்வு, ஓரம், ஓரை முதலி யனவும் 'ஓரி' என்பதும் பிறக்கும்.

ஓர்தல் என்பது ஆராய்தல், கூர்ந்துகேட்டல் ஆகிய பொருள் களைத் தரும். ஒருமுகப்பட்ட கூர்ப்பின் அடிப்படையில் ஆய்வு உண்டாகுமே அன்றிப் பலவகையாகச் சிதறிய புலனால் அறிவும் கேள்வியும் தலைப்படா. ஓர்தல் என்பது கருத்தின்றிக் கேட்டலைக் குறியாமல் கூர்ந்து செவியைத் தீட்டிக் கேட்டலையே குறிக்கும்; ஓர்வு என்பதும் ஓர்தல் போன்றதேயாம்.

"திரிபுரி நரம்பின் தீந்தொடை ஓர்க்கும்" (பட். 254)

"மாதர் வண்டின் நயவருந் தீங்குரல்
மணநாறு சிலம்பின் அசுணம் ஓர்க்கும்" (நற். 244)

"நறுஞ்சே ருடிய வறுந்தலை யானை
நெடுநகர் வரைப்பில் படுமுழா வோர்க்கும்" (புறம். 68)

ஓர்ப்பு என்பது ஆடவர் இயல்நலம் நான்கனுள் ஒன்று; மற்றை யவை அறிவு, நிறை, கடைப்பிடி என்பன; ஓர்ப்பாவது மனத்திடன்; ஓர்மம், ஓர்மை, ஓர்மிப்பு என்பனவும் இதுவே. ஐம்புலனும் ஒன்றுகச் செலுத்த வல்லார்க்கல்லது மனத்திடன் வாராதே! "ஐம்புலனும் வென்றுன்தன் வீரமே வீரமாம்" என்பதை நோக்குக.

ஓரம், நடுநிலைச் செல்லாது ஓரஞ் செல்லுதலும், நடுநிலைச் சொல்லாது ஓரஞ் சொல்லுதலும் ஓரமாம்; அஃதாவது ஒருபால் கோடல். நடைவழிக்கு உரியது நடுவுநிலை வழிக்கும் ஆகியது. ஓரஞ் செல்லல் சாலை விதி; ஓரஞ் சொல்லல் சால்பாளர் பழிக்கும் விதி. ஒரு மரத்திற் கவடாய் வந்தது ஓரச் சொல். ஓரக்கண், ஓரப்பார்வை, ஒருசிறை, ஒருச்சாய்தல் என்பனவும் ஓரப் பொருளில் வருவனவே.

ஓரை என்பது மகளிர் விளையாட்டும், விளையாடும் இடமும், விளையாடும் மகளிரும், விளையாடற்காம் பொருளும் முதலியவற்றைக்

குறிக்கும். ஒத்த பருவத்து ஒருணர்வொன்றிய மகளிர் உவகைப் பெருக்கால் ஒன்றுபட்டு ஆடும் ஆடற் குறிப்பால் ஓரையாயிற்று. விளையாடும் மகளிரை, 'ஓரை மகளிர்' என்றும் (குறுந். 316), அவர்கள் கூட்டத்தை 'ஓரை ஆயம்' என்றும் (குறுந். 48) கூறுவர். ஓரை மகளிரின் ஒப்பாந்தன்மையை, "உடன் பிறந்து உடன் வளர்ந்து, நீர் உடனாடிச் சீர் உடன்பெருகி, ஓல் உடனாட்டப் பால் உடன் உண்டு, பல் உடன் எழுந்து, சொல் உடன் கற்றுப் பழமையும் பயிற்றியும் பண்பும் நண்பும் விழுப்பமும் ஒழுக்கமும் மாட்சியும் உடையார்" என்னும் களவியல் உரையால் நன்கு அறியலாம் (2)

ஓரை என்னும் மற்றொரு பொருள் பொதிந்த சொல்லும் உண்டு; நாளும் கோளும் நல்லனவாகவும் எல்லா நலங்களும் இனிது இயைப்பனவாகவும் கணியரால் தேர்ந்துகொள்ளப் பெறும் 'முழுத்தமே' ஓரை என்பதாம். இதனால், ஓரை முழுநிறை பொருள்பொதி செந்தமிழ்ச் சொல்லாதல் கொள்க. 'முழுத்தம்' என்னும் வழக்கு இன்றும் வழக்கில் இருக்கவும் 'முகூர்த்தத்தில்' முழுக்காடும் மக்கள் தமிழறிந்தோர் ஆகார்.

இனி 'ஓரி' என்பதைக் காண்போம். 'ஓரி' என்பது ஒன்று என்பதையும், தனித்துத் திரியும் விலங்கையும், ஒரு பெற்றோர்க்குப் பிறந்த தனிமகவையும், ஒருதானாக ஓங்கிய ஒரு திறலோனையும் குறிக்கும். இவற்றின் வழியே பற்பல பொருள்களும் கிளைத்துப் பெருகும்.

'ஓரிப் புதல்வன்' என்னும் கலியையும் (114) "ஓரிமாங்காய்" என்னும் குழந்தைப் பாட்டையும், 'ஓரி, ஈரி' என எண்ணும் சிறார் விளையாட்டையும் எண்ணுக. ஒரு குடிக்கு ஒரு மகவாகப் பிறந்தார்க்கு 'ஓரி' எனப் பெயர் சூட்டல் வழக்குண்மையும் கருதுக.

கூட்டத்தில் இருந்து பிரிந்து ஒரு கோட்பாட்டால் தனித்துறையும் குரங்கு, நரி முதலியவற்றையும், பொதுவாக விலங்கின் ஆணையும், ஓரியென்னும் வழக்குண்மை அறிக.

*"அழல்வாய் ஓரியோ டறுகை பம்பி"* (பட். 257)

*"வெவ்வாய் ஓரி முழவாக"* (சீவக.)

என்பன நரியையும்,

*"அணிமிற ஓரி"* (புறம். 109)

*"புன்றலை ஓரி"* (குறுந். 221)

*"நீனிற ஓரி"* (மலை. 524)

என்பன குரங்கையும் குறிப்பன. "பாய்ந்தும் தாவியும் செல்லுதலில் வல்ல குரங்கும் நரியும் 'ஓரி' என்றாற் போலவே, 'குதிரை' என்பதற்கும் ஓரிப் பெயர் இருந்திருக்க வேண்டும்! அவ் விலங்குகளினின்று குதிரையாம் 'ஓரி'யைத் தனித்துக் காட்டற்கே 'ஓரிக் குதிரை' (சிறு. 111) என்றார் போலும்'' எனக் கருத நேர்கின்றது. தனித்த ஆண் விலங்கைக் குறிக்கும் 'ஓரி' என்னும் சொல் பின்னர் ஆண் மக்கள், ஆண் விலங்கு இவற்றின் மயிரையும் குறிக்கலாயிற்று.

''ஊட்டுளை துயல்வர ஓரி நுடங்க'' (பொருந. *164.*)

''மேல்பால் உரைத்த ஓரி'' (பெரும். *172*)

இனி, ஓரி என்பான் கோடையாண்மை, "மழவர் பெருமகன் மாவள் ஓரி" (நற். 52) "மாரி வண்மகிழ் ஓரி" (நற். 265) "திண் தேர்க் கைவள் ஓரி" (குறுந். 199) ''கருவி வானம் போல வரையாது வழங்கும் வள்ளியோய்" (புறம். 204) என்பனவற்றால் புலப்படும். இத் தன்மையால் ஓரி உலவாக் கொடை வள்ளல்களுள் ஒருவன் ஆனான். ஆனால், அவன் படையாண்மையாலேயே ஓரிப் பெயர் பெற்றான்.

"வல்வில் ஓரி" (நற் 6; குறுந். 100; அகம். 109; புறம். 158) "பழ விறல் ஓரி" (நற். 320) "அடுபோர் ஆனா ஆதன் ஓரி" (புறம். 153) இவை ஓரியின் படையாண்மைக் குறிப்புகள். ஆயின் இவற்றால் அவன் ஒப்பற்றவன் என்று உறுதி செய்தற்கு இல்லை! என்னெனின், இவ் வாண்மை வேந்தர்க்குப் பொதுத் தன்மையேயாம். ஓரிக்கெனச் சொல்லும் சிறப்பாண்மை அன்றாம். அவனுக்கென அமைந்த, அவன் ஒருவனுக்கே அமைந்த தனிச் சிறப்பாண்மையை நேரில் கண்டு நெகிழ்ந்துபோய் உரைக்கிறார் புலவர் வன்பரணர்.

''வேழம் வீழ்த்த விழுத்தொடைப் பகழி
பேழ்வாய் உழுவையைப் பெரும்பிறி துறீஇப்
புழற்றலைப் புகர்க்கலை உருட்டி உரற்றலைக்
கேழற் பன்றி வீழ அயலது
ஆழற் புற்றத் துடும்பிற் செற்றும்
வல்வில் வேட்டம் வலம்படுத் திருந்தோன்...
..............................
ஓரி கொல்லோ அல்லன் கொல்லோ'' —(புறம். *152*)

யானையை வீழ்த்திய அம்பு, புலியின் பெரிய வாயுள் புகுந்து அதனை வீழ்த்திப், பின்னர் ஒரு புள்ளிமானையும் பன்றியையும் வீழச் செய்து, அடுத்திருந்த புற்றிற் கிடந்த உடும்பில் தைத்து நின்றது!

ஓரியின் இவ் வொப்பற்ற திறனுக்கு ஈடாகப் பண்டையோர் பாடற் சான்று ஒன்றும் இன்ரும்! பிற்காலப் புனைந்துரைப் பாடல்கள் "அலையுருவக் கடலுருவ" "மேருவை உருவு மென்ருல், விண்கடந் தேகுமென்ருல்" (கம்பர்) என வருபவற்றை ஒப்பிடுதல் ஆய்வுக்கு உரியதன்ரும்.

வில்லுக்கு ஒருவனுக விளங்கிய ஏந்தலின், வலியவில்லாண் மையைச் சுட்டு முகத்தான் 'ஓரி' என்றும், அதனை விளக்கு முகத்தான் 'வல்வில் ஓரி' என்றும் பண்டையோர் பெயர்சூட்டி மகிழ்ந்தனர் எனக் கொள்க.

"வில்லாண்மையில் சிறந்தமை வீறுபெற்று விளங்கிய பிற்காலத் தன்றே, பேறு பெற்ற காலத்தன்ரே பெயர் சூட்டுவது, பிற்காலத்தே இவன் இன்னவாறிருப்பன் என்பதை உணர்ந்தோ பெயர் சூட்டினர்" என்று மறுப்பார் உளராயின், நாம் பயில வழங்கும் பண்டையோர் பெயர்களுள் பலவும் பிறந்தநாளிட்ட பெயரன்று; சிறப்பாலும் சீர்மையாலும் வீற்ருலும் விழுப்பத்தாலும் பெற்ற பெயர்களே என்றும், இந் நாளிலும் துறவுப் பெயர், முடிசூட்டுப் பெயர், தூநீர் முழுக்குப் பெயர், பட்டப் பெயர் இன்னவாறெல்லாம் இருத்தலைக் காண்கிருேமே என்றும் அமைக.

கங்கை கொண்டான், கடாரங் கொண்டான், ஈழந்திறை கொண்டான், கொல்லங் கொண்டான், முடிவணங்கான், தகடூர் எறிந்தான், கருவூர் ஏறினுன் என்பன போல்வனவற்றை எண்ணுக. வில்லாண்மையில் ஒப்பிலாது "ஒரு மாமணியாய் ஓங்கிய திருமாமணி" 'ஓரி' எனக் கொள்க. தமிழர்தம் வாக்கின் வலுவின்மையும், மடிமையும் குடிமைத் தாழ்ச்சியாய், 'வில்லுக்கு ஓரி' என்னும் விழுப்பத்தைத் தாராது ஒழிந்ததாம் என்பதை எண்ணுக.

———

## ஏன் படிக்கவேண்டும் ?

*"படிப்பதால் ஏற்படும் சுவை உன்னை மிக உயர்ந்த சமுதாயத்தினரிடையே கொண்டு சேர்க்கும். அதனுல் நீ நல்லறிஞருடன் உரையாடக் கூடும். அவர்கள் தம் சொல்லாற்றலால் உன்னை மயங்கச் செய்வர். நீ படபடப்புக் கொள்ளும்போது உன்னை அமைதியுறச் செய்வர்; குழப்பமடையும்போது புத் துணர்ச்சி ஊட்டுவர்; கலக்கமடையும்போது அறிவுரை கூறுவர்."*

—ஹில்லார்டு

# தலைக்கழகக் காலம்

[இரா. மதிவாணன்]

தித்திக்கும் செந்தமிழை முத்தமிழாக வளர்த்த குமரிக்கண்ட பாண்டியர், பஃறுளியாற்றுத் தென்மதுரையில் நிறுவிய தலைக்கழகக் காலம் நம்மால் வரையறுக்கக் கூடியதாகவுள்ளது.

'முக்கழகங்கள் தமிழ்வளர்க்க நிறுவப்பட்டிருந்தனவா?' என்று வினவுவார்க்கும், 'முத்தமிழ்ப் பாகுபாடு இருந்ததா?' என்று வினவுவார்க்கும்,

''தெரிமாண் தமிழ் மும்மைத்
தென்னம் பொருப்பன்''

எனப் பாண்டியருக்குக் கொடுக்கப்பட்ட அடை மொழியும்,

''கண்ணுதற்பெருங் கடவுளும் கழகமோ டமர்ந்து
பண்ணுறத் தெரிந் தாய்ந்தவிப் பசுந்தமிழ்''

என்னும் திருவிளையாடற் புராண வரிகளும் தக்க அகச் சான்றுகளாயமைந்து விடை பகர்கின்றன.

மதுரைத் தமிழ்க் கழகத்தில் அரங்கேறிய தமிழ்ப்பாடல்களைப் பாணரும் கூத்தரும் நாடு முழுதும் பரப்பினர் என்பதை,

''நிலனாவிற் றிரிதரூஉம் நீண்மாடக் கூடலார்
புலனாவிற் பிறந்தசொல் புதிதுண்ணும் பருவத்து''

என்னும் கலித்தொகை வரிகள் நன்கு நிறுவுகின்றன.

தமிழ்மொழி பேச்சுவழக்கு வேறுபாடுகளால் திரிந்து பல மொழிகளாகப் பிரியாமலிருக்கும் பொருட்டும், அறிவும் கலைகளும் வளரச் செழுமையான விளைநிலமாகத் தமிழ்மொழியின் வளம் அமையவும், மக்களின் பண்பாடு, நாகரிகம் ஆகியவை கட்டிக் காக்கப்பட இலக்கியச் செல்வங்களை எண்ணிலா அளவில் பெருக்கவும், தெளிந்த உள்ளமும் விரிந்த அறிவும் வளர்க்க வழிவகுக்கும் இயற்றமிழும் அடிமனத்தின் செவிகளிலே இசையமுதம் நிரப்பி, உலகத்தவரையும் உயிரினங்களையும் தமிழ்ச் சுவையின்பால் திருப்ப இசைத்தமிழும், தனிமாந்தனின் ஒழுகலாறுகளைத் (Private sincerity is a public welfare'' என்பதற்கேற்ப) திருத்திச் செம்மையாக்கினால் நாட்டில் தமிழ்ப் பண்பாடும் செவ்விய வாழ்க்கையமைப்பும் அமையும் என்பதால் நாடகத்தமிழும் முத்தமிழாக வளரவேண்டும் என்னும் நோக்கம் நிறைவுறத் தமிழ்க் கழகம் பாண்டியர்களால் நிறுவப் பட்டது. தமிழ்க்கழகத்தைப் பிற்காலத்தார் தமிழ்ச்சங்கம் என்றனர். தமிழ்க்கழகத்தின் பெயரைக் கூடத் தமிழில் சொல்ல நாணினால் தமிழ் வளருமா? எனவே, தமிழ்ச்சங்கம் என்னும் சொல்லைத் தவிர்த்துத் தமிழ்க்கழகம் என்னும் பழஞ்சொல்லையே ஆள வேண்டும்.

இன்றேல், இன்றைய வரலாற்றாசிரியர்கள், வடமொழியில் 'சங்கம்' என்னும் சொல்லாட்சி தோன்றிய பிறகுதான் தமிழர்கள்

அச் சொல்லைக் கடனாகப் பெற்றுத் தமிழ்ச்சங்கம் நிறுவினர் என்று கட்டிவிடுவர்.

உலகத்தின் முதல் நாகரிகத் தொட்டிலாக விளங்கிய கடல் கொண்ட குமரிக் கண்டத்தில், ஏழ்மதுரை நாடு, ஏழ்தெங்க நாடு, ஏழ்குணகரை நாடு, ஏழ்பனை நாடு, ஏழ்குன்றநாடு, ஏழ் முன்பாலை நாடு, ஏழ் பின்பாலை நாடு என நாற்பத்தொன்பது நாடுகள் இருந்தன. குமரிநாடு இன்றைக் குமரிமுனையிலிருந்து 700 காவதம் தெற்கில் நீண்டிருந்தது. ஏழ்மதுரை நாட்டின் தலைநகரான தென்மதுரையில் பாண்டியன் காய்சின வழுதி. கி. மு. 10, 520 இல் முதன் முதலாகத் தலைக்கழகம்(முதல் தமிழ்ச்சங்கம்) நிறுவினான். இறையனார் களவியலுரையில் கூறப்பட்ட காலக் கணிப்பின்படி இக் காலம் வரையறுக்கப்படுகின்றது. மரபுவழி வந்த செய்தியைத்தான் களவியலுரைகாரர் கூறுகிறார். அதனை வரலாற்றுச் செய்தியாக ஏற்பதில் தவறில்லை. சென்னாகரிபு என்னும் பாபிலோனிய மன்னன் கி. மு. ஏழாம் நூற்றாண்டில் பருத்தியை இந்தியாவிலிருந்து தன்னாட்டிற்குக் கொண்டு சென்றான் என்னும் செய்தியை வரலாறாக ஏற்கிறார்கள். எகுபது நாட்டு பாபிரசு ஏட்டில் உள்ளதை வரலாறாக நம்புகின்றனர். அவற்றைப்போலவே, மரபுவழிவந்த இறையனார் களவியலுரை யின் கூற்று பழையஏட்டில் (ஓலைச்சுவடியில்) உள்ளது. தமிழ்ஓலைச் சுவடிச் செய்தியை வரலாறாக ஏற்கத்தயங்குவது ஏன்? வெள்ளை யன் சொன்னால்தான் உண்மை என்று நம்பும் அடிமை மனப் பாங்கில் வளர்ந்து தாய்நாட்டு வரலாற்றில் கடுகளவும் கருத்துச் செலுத்தாதோரால், தமிழக வரலாற்றை மீட்டமைக்க வியலாது.

இலங்கையின் தொன்னூலான மகாவம்சம் கி. மு. 2380 இல் ஏற்பட்ட பெருங்கடல் கோளின்போது இலங்கை தனித் தீவமாகப் பிரிந்துவிட்டது என்று கூறுகிறது. அதற்கு முன்பு, தலைக்கழகக் காலத்தில் ஏழ்பனை நாட்டின் ஒரு பகுதியாகவும், இடைக் கழகக் காலத்தில் கதவபுரத்தைத்(கபாடபுரம்) தலைநகராகக் கொண்டு பாண்டி நாடாண்ட பாண்டியரின் அகநாட்டுப் பகுதியாகவும் இலங்கை விளங்கியது. இரண்டாம் தமிழ்க்கழகம் இருந்த கதவபுரம் கடல் கொண்டதும் இலங்கை தனித் தீவமாகப் பிரிந்ததும் கி. மு. 2380—இல் ஏற்பட்ட கடல் கோளால் என்பது, இதே காலத்தில் ஏற்பட்ட கடல் கோளையே விவிலியமும் குறிப்பிடுவதால் உறுதிப்படுகிறது. இஃது உலகின் பெரும்பகுதியை உலுக்கிய கடல் கோள்.

கதவபுரம் கடல் கொண்ட பின் பாண்டியன் முடத்திருமாறன் கடல்கோளிலிருந்து தப்பிப் பிழைத்துத் தமிழ்ச் சுவடிகளையும் காத்து அடுத்த தமிழ்க் கழகம் தொடங்கும் வரை மணலூரில்

தன் தலைநகரை அமைத்திருந்தான். சில நூறு ஆண்டுகளுக்குப் பின் மணலூரும் கடல் கொண்டதால் வைகைக் கரையிலுள்ள இன்றைய மதுரையில் மூன்றும் தமிழ்க்கழகம் தொடங்கியது. மூன்றும் தமிழ்க்கழகம் 1950 ஆண்டுகள் நடைபெற்றன என்பதாலும், மணலூரில் குறைந்த பக்கம் 600 ஆண்டுகள் தமிழ்க் கழகம் காக்கப்பட்டிருக்க வேண்டும் என்பதாலும், மகாவம்சம் கூறும் காலக்கணிப்பு இரண்டாம் தமிழ்க்கழகம் இருந்த கதவபுரம் கடல் கொண்ட இரண்டாம் வெள்ள வூழியைக் குறிப்பதாகக் கணிக்கலாம்.

இரண்டாம் தமிழ்க்கழகம் 3700 ஆண்டுகள் நடைபெற்றது. இதைத் தோற்றுவித்தவன் வெண்தேர்ச்செழியன். எனவே, வெண்தேர்ச்செழியன், இரண்டாம் தமிழ்க்கழகமாகிய இடைக் கழகத்தைக் கதவபுரத்தில் தொடங்கிய காலம் (3700+2380) கி. மு. 6080 என்பதில் ஐயமிருத்தல் இயலாது.

தலைக்கழகம் 4440 ஆண்டுகள் நடைபெற்றது. எனவே, பாண்டியன் காய்சினவழுதி தென் மதுரையில் தலைக்கழகம் தோற்றுவித்த காலம் (6080+4440) கி. மு. 10, 520 என்று தெரிகிறது.

தலைக்கழகக் காலம் 4440 ஆண்டுகள் இடைக்] கழகக் காலம் 3700 ஆண்டுகள் கடைக்கழகக் காலம் 1950 ஆண்டுகள் என்னும் கூற்று மிகையானவை அல்ல. ஒரோர் கழகக் காலத்திலும் வாழ்ந் திருந்த பாண்டிய மன்னர்களின் எண்ணிக்கையால் கழகக்காலத்தை வகுத்தால் ஒவ்வொரு பாண்டியனின் ஆட்சிக் காலமும் 30—40 ஆட்சியாண்டிற்குள்தான் வருகிறது. ஆதலால் இந்தக் கணிப்பு வரலாற்று நோக்கில் இயற்கையானது.

நண்ணிலக் கடலடுத்த தொன்முது நாகரிகங்களில், இன்றைய சோர்டான் (Jordan) நாட்டில் செரிகோ (Jerrico) என்னுமிடத்தில் நடத்திய அகழ்வாய்வின்படி, செரிகோ நகர நாகரிகம் கி. மு. 9760 இல் தோன்றியது என்று கூறுகின்றனர். வெயிலிற் சுடப்பட்ட செங்கற்களால் அந்நகரத்தில் மாடிவீடுகள் கட்டப் பட்டிருந்தனவாம். இதை நோக்க, குமரிநாட்டுத் தென் மதுரையில் திருந்திய நாகரிகம் கி. மு. 10,000 ஆண்டுகளுக்கு முன்பே தோன்றியிருந்தது என்றும் கி. மு. 10,520 ல் தலைக்கழகம் தோன்றியது என்றும் கொள்வதில் வியப்பில்லை.

உலக முழுவதும் விளங்கிய தொன்முது நாகரிகங்களுக்குக் குமரிக்கண்ட நாகரிகமே ஊற்றிடம் என்றும், உலகமொழிகள் அனைத்தும் தமிழிலிருந்து கிளைத்துப் பிரிந்து வளர்ந்தவையே என்றும் அறிஞர்களின் ஆய்வுமுடிபுகள் வெளிப்படுத்தி வருகின்றன. இதன்படி முக்கழகக் காலங்களைப் பின்வருமாறு பட்டியற்படுத்தலாம்.

| | இடம் | தமிழ்க்கழகம் | நிறுவிய மன்னன் | தோற்றுவித்த ஆண்டு | முடிந்த ஆண்டு | தமிழ்க்கழகம் நடைபெற்ற காலம் |
|---|---|---|---|---|---|---|
| 1. | பஃறுளியாற்றுத் தென்மதுரை | தலைக்கழகம் (முதல் தமிழ்ச் சங்கம்) | பாண்டியன் காய்சின வழுதி | கி. மு. 10,520 | கி. மு. 6080 | 4440 ஆண்டுகள் |
| 2. | குமரியாற்றுத் துறைமுகநகரம் கதவபுரம் | இடைக்கழகம் (இரண்டாம் தமிழ்ச் சங்கம்) | பாண்டியன் வெண்டேர்ச் செழியன் | கி. மு. 6,080 | கி. மு. 2,380 | 3700 ஆண்டுகள் |
| | குமரியாற்றங்கரை மணலூர் | இடைக்கழக இடைக்காலம் | பாண்டியன் முடத்திருமாறன் | கி. மு. 2;380 | கி. மு. 1,780 | 600 ஆண்டுகள் |
| 3. | வைகைக்கரை மதுரை | கடைக்கழகம் (மூன்றும் தமிழ்ச் சங்கம்) | பாண்டியன் திருமாறன் | கி. மு. 1780 | கி. பி. 170 | 1950 ஆண்டுகள் |

# கள்வன்

[தமிழாகரர், பேராசிரியர், முனைவர். சொ. சிங்காரவேலன்,
எம். ஏ., பிஎச். டி., டிப், மொழியியல்
அ. வ. அ. கல்லூரி, மாயூரம்.]

**இலக்கிய மரபில் :**

தலைவனைக் கள்வன் என்று கூறும் இலக்கிய மரபு சங்க இலக்கியத்திற் காணப்படுகின்றது :

"யாரும் இல்லைத் தானே கள்வன்
தானது பொய்ப்பின் யானெவன் செய்கோ
தினைத்தா ளன்ன சிறுபசுங் கால
ஒழுகுநீர் ஆரல் பார்க்கும்
குருகும் உண்டுதான் மணந்த ஞான்றே"

(குறுந்தொகை - 25)

"அறியாற் குரைப்பலோ யானே எய்த்தவிப்
பணையெழின் மென்றோள் அணைஇய வந்தாட்
பிழையா வஞ்சினம் செய்த
கள்வனும் கடவனும் புணைவனும் தானே"

(குறுந்தொகை - 318)

திருக்குறளிலும் இந்தக் கவிமரபு காணப்படுகின்றது :

"பன்மாயக் கள்வன் பணிமொழி யன்றோநம்
பெண்மை யுடைக்கும் படை" (திருக்குறள்-1258)

**சமயமரபில் :**

சமய நெறியில், அகப்பாட்டு வகையில் இம் மரபும் புகுந்தது; திருஞானசம்பந்தரது முதற்பதிகம் முழுவதுமே, "என் உள்ளம் கவர் கள்வன்" என்று இறைவனைக் குறிக்கின்றது. திருநாவுக்கரசரும் இறைவனைக் 'கள்வன்' என்று குறிக்கும் இடங்களும் உண்டு :

"வெள்ளை நீறணி மேனிய வர்க்கெலாம்
உள்ள மாய பிரானுர் உறைவிடம்
பிள்ளை வெண்பிறை சூடிய சென்னியான்
கள்வன் சேர்கடம் பூர்க்கரக் கோயிலே" (அப்பர்-1273)

''வாச மலரின்கண் மான்தோல் போர்ப்பர்
மருவும் கரியுரியர் வஞ்சக் கள்வர்'' (மேற்படி-2257)

''கருவுற்ற காலத்தே என்னை யாண்டு
கழற்போது தந்தளித்த கள்வர்'' (மேற்படி-2971)

''வேதம் ஓதி விளங்குவெண் தோடராய்க்
காதில் வெண்குழை வைத்தஎம் கள்வரே'' (மேற்படி-1296)

''கரப்பர் கரியமனக் கள்வர்க்கு உள்ளம்
கரவாதே தம்மினைய கிற்பார்பாவம், துரப்பர்''
(மேற்படி-2258)

''நினைத்தவர்கள் நெஞ்சுளாய்
வஞ்சக் கள்வா'' (மேற்படி-2708)

திருநாவுக்கரசர் தம் திருப்பாட்டுக்களில் இறைவன் தம் நெஞ்சுள் சுவடின்றிப் புகுந்து தம்மை ஆட்கொண்டதை எண்ணி உருகும் நிலையில் இவ்வாறு பல்வேறிடங்களில் 'கள்வன்' என்று கூறியதுடன், 'கள்ளன்' என்றும் குறிப்பிட்டுள்ளார். ''கள்ளத்தே நிற்றி அம்மா'' என்று வியந்ததும் உண்டு. (மேற்படி-743)

தம்முடைய உணர்வுவயமாக, இறைவன் தம் உள்ளத்தில் புகுந்து ஒளிந்துகொண்டபோது, ''கள்ளரோ! இவ்வாறு புகுந்தீரே!'' என்று தாம் வினவியதாகவும், முதல்வன் ''வெள்ளரோம்'' (வெளிப்படையானவர்) என்று கூறிச் சிரித்து மகிழ்ந்து உரையாடியதாகவும் கூறும் தனித் திருநேரிசை (734) ஓதி மகிழும் திறம் உடையது :

''வெள்ளநீர்ச் சடைய னார்தாம்
வினவுவார் போல வந்து என்
உள்ளமே புகுந்து நின்றார்க்கு
உறங்குநான் புடைகள் போந்து,
கள்ளரோ புகுந்தீர் என்னக்
கலந்துதான் நோக்கி நக்கு
வெள்ளரோம் என்று நின்றார்
விளங்கிளம் பிறைய னாரே''

என்பது அவ்வழகிய திருப்பாட்டு.

சாத்திர மரபில் :

மெய்கண்ட சாத்திரத்துள்ளும் முதல்வனைக் ''கள்வன்'' என்று குறிக்கும் மரபைக் காண்கின்றோம். சிவஞானபோதத்தின்

ஒன்பதாம் சூத்திரத்துத் திருவெண்பாவில் மெய்கண்டார் பின்வருமாறு அருளுகின்றார் :

"காட்டிய கண்ணே தனைக்காணா கண்ணுக்குக்
காட்டாய வுள்ளத்தைக் கண்காணா—காட்டிய
உள்ளம் தனைக்காணா உள்ளத்தின் கண்ணாய
கள்வன்றான் உள்ளத்திற் காண்"

கண்ணிடத்து உயிர் நிற்குமாறு போலன்றி, உயிர்க்கு அதன் அறிவாகி உடன்நின்ற கள்வன் முதல்வன் என்றும், அவனை உள்ளறிவின்கட் காண்பாயாக என்றும் தெருட்டுகின்றது இத் திருப்பாட்டு.

'கள்வன்' என்ற சொல்லில் ஆழ்ந்து அதன் பொருணலம் காட்டுகின்றார், மாதவச் சிவஞான முனிவர் :

"உடனின்றும் பசுஞான, பாச ஞானங்களான் அறியப் படாமை பற்றிக் கள்வன் என்றார்."

(சாதனவியல்—9ஆம் சூத்திரம்—முதல் அதிகரணம் உரைப்பகுதி)

பதிஞானம் ஒன்றே கொண்டு காணப்படும் பரம்பொருளாம் முதல்வன், இவ்வாறு ஏனைய இரண்டு ஞானங்களாலும் காண இயலாமற் கரந்து நிற்றலின் அவனைக் 'கள்வன்' என்று குறித்தல் பெரிதும் பொருந்துவதாகவே உள்ளது; இது சாத்திர நோக்கு.

இறைவனைக் 'கள்வன்' என்று குறிப்பது எல்லா உயிர்களினிடத்தும் நீக்கமற நிறைந்திருந்தும் அவை வினைப் பயன்களை நுகர ஒளித்து நிற்கும் 'திரோபவம்' (மறைப்பு) என்ற இயல்பைச் சுட்டுவது என்று கயப்பாக்கம் சதாசிவச் செட்டியார் கூறுவர். (தருமை யாதீனப்பதிப்பு—முதல் திருமுறை—முதல் பதிகம்—மகாவித்துவான். திரு. ச. தண்டபாணி தேசிகர் அவர்களின் உரைப்பகுதி)

## நோக்கம் என்ன ?

நம்முள் நின்று நம்மைக் காக்கும் 'முதல்வன்' கருணையையறிந்து அவனை உணர்ந்து ஓதி விழுப்பயன் பெறுவதே நம் வாழ்வின் குறிக்கோள். அதனைச் சுட்டுவதே நம் அருளாளர்கள் 'கள்வன்' என்ற சொல்லால் முதல்வனைக் குறிப்பதன் நோக்கம் என்று கூறுவது மிகையாகாது.

———

# செய்திகளும் குறிப்புக்களும்

## பண்டித சவகர்லால் நேரு பிறந்தநாள் விழா

பண்டித சவகர்லால் நேரு அவர்களின் 92ஆவது பிறந்தநாள் விழா, குழந்தைகள் நாள் விழாவாகத் தமிழ்நாடு அரசின் சார்பில் நவம்பர்த் திங்கள் 13, 14, 15ஆம் நாள்களில் முறையே சென்னைக் கலைவாணர் அரங்கம், வள்ளுவர் கோட்டம், இராசாசி மண்டபம் ஆகிய இடங்களில் மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பெற்றது. சட்டமன்றப் பேரவைத் தலைவர் மாண்புமிகு க. இராசாராம் அவர்கள், கல்வித்துறை துணைச் செயலர் திருமதி சி. கே. கரியாளி, பள்ளிக் கல்வி இயக்குநர் முனைவர் கே. வேங்கடசுப்பிரமணியம் ஆகியோர் முறையே மூன்று நிகழ்ச்சிகளுக்கும் தலைமை தாங்கினர். சிறுவர்கட்கு ஓவியக் காட்சியும், புத்தகக் காட்சியும் அமைக்கப்பட்டிருந்தன. குழந்தைகள் அணிவகுப்பு, பல்சுவை நிகழ்ச்சிகள் ஆகியனவும் நடைபெற்றன.

## 13ஆவது தேசிய நூலக வார விழா

13ஆவது தேசிய நூலக வார விழா 15—11—80 முதல் 21—11—80 முடிய, சென்னை இராசாசி மண்டபத்தில் நடைபெற்றது. 15—11—80இல் நூல் காட்சியினை முனைவர் ம. பொ. சிவஞானம் அவர்கள் திறந்துவைத்தார். எழுத்தாளர் கலந்துரையாடல், குழந்தைகள் கலைநிகழ்ச்சி, வில்லுப்பாட்டு ஆகியனவும் விழாவில் இடம் பெற்றன. 21—11—80இல் மாண்புமிகு அமைச்சர் முனைவர் நாவலர் நெடுஞ்செழியன் அவர்கள் நிறைவு விழாவுக்குத் தலைமை தாங்கிச் சொற்பொழிவாற்றினர்.

## சென்னைப் பல்கலைக் கழகம்—தமிழ்மொழித்துறை

12-11-80இல் சென்னைப் பல்கலைக்கழக நூற்றாண்டுவிழா மண்டபத்தில், துணைவேந்தர் முனைவர் கோ. அரங்கதாமோதரன் அவர்கள் தலைமையில் நூல் வெளியீடும் கருத்தரங்குத் தொடக்கவிழாவும் நடைபெற்றன. மாண்புமிகு கல்வி அமைச்சர் செ. அரங்கநாயகம் அவர்கள், தமிழ்ப் பேரகராதி தொகுதி-1, தமிழாய்வு-10, கல்கத்தா தேசிய நூலகச் சுவடிகள், பாரதி தீபம் ஆகிய நூல்களை வெளியிட்டுக் கருத்தரங்கினைத் தொடங்கிவைத்தார். முனைவர் ம. பொ. சிவஞானம் வாழ்த்துரை வழங்கினர். முனைவர் கா. மீனாட்சிசுந்தரம் சிறப்புரை ஆற்றினார்.

## தமிழிலக்கியத்துறை நிகழ்ச்சிகள்

சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ் இலக்கியத்துறையின் சார்பில் 3—11—80 முதல் 28—11—80 முடிய, பேராசிரியர்கள் முனைவர்கள் மற்றும் கலைத்துறையினர் பல்வேறு பொருள்கள் பற்றிய ஆய்வுரை நிகழ்த்தினர். 28—11—80இல் முனைவர் ந. சஞ்சீவி, திரு. அரங்க நலங்கிள்ளி ஆகியோர் தலைமையில் எழுத்தாளர் நேருக்குநேர் கலந்துரையாடல்களும் நடைபெற்றன.

## தேவி வள்ளியம்மன் தவப்பீடம்

15—11—80இல் வள்ளிமலை வடக்கு மலையடிவாரத்தில் தேவி வள்ளியம்மன் தவப்பீடம் கிருபானந்தவாரியார் அடிகள் குருகுலம் அமைக்கும் கால்கோள் விழா மிகச் சிறப்பாக நடைபெற்றது. தவத் திரு கிருபானந்தவாரியார் அவர்கள், சட்டமன்றத் தலைவர் மாண்புமிகு க. இராசாராம், தவத்திரு மயிலை சுந்தரராம் அடிகள் ஆகியோரும், மற்றும் அறிஞர் பலரும் கலந்துகொண்டு விழாவைச் சிறப்பித்தனர்.

தேவி வள்ளியம்மன் தவப்பீடம் அமைக்கும் திருப்பணிக்கு நன் கொடை வழங்குமாறு வாரியார் அடிகள் ஒரு வேண்டுகோள் விடுத் துள்ளார்.

## முனைவர் நாவலர் மணிவிழாமலர் வெளியீட்டு விழா

சென்னைக் கலைவாணர் அரங்கில் 27-11-80 வியாழன் மாலை தமிழகப் பொருள்நிலை அமைச்சர் மாண்புமிகு நாவலர் முனைவர் இரா. நெடுஞ்செழியன் அவர்கட்கு மணிவிழா நடைபெற்றது. சட்டப் பேரவைத் தலைவர் மாண்புமிகு. க. இராசாராம் அவர்கள் தலைமை தாங்கினார். முத்தமிழ்க் காவலர், முனைவர் திரு. கி. ஆ. பெ. விசுவ நாதம் அவர்கள் மணிவிழா மலரை வெளியிட்டார். திரு. ப. உ. சண் முகம் அவர்கள் பொன்னாடை போர்த்தினார். அறிஞர் பெருமக்களும், அரசியல் தலைவர்களும் வாழ்த்துரை வழங்கினர். நாவலர் நெடுஞ் செழியன் அவர்கள் நல்வளம் பலவும் பெற்று நீடுவாழ்கவென வாழ்த்து கின்றோம்.

## பேராசிரியர் க. த. திருநாவுக்கரசு அவர்கட்குப் பொன்விழா

உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவன இணைப்பேராசிரியர், முனைவர் க. த. திருநாவுக்கரசு அவர்கட்குப் பொன்விழா 21—11—80 ல் சென்னையில் கொண்டாடப்பெற்றது. தமிழகச் சட்ட மேலவைத் தலைவர் ம. பொ. சிவஞானம் அவர்கள் மாணவர்கட்கும் பொது மக்களுக்கும் பயன்படும் முறையில் பேராசிரியர் வரலாற்றுநூல் எழுது கின்ற பணியைப் பாராட்டியதோடு அவருக்கும் அவர் குடும்பத் தாருக்கும் பொன்னாடை போர்த்திச் சிறப்பித்தார். விழாவுக்குத் தலைமை தாங்கிய சென்னைப் பல்கலைக் கழகப் பேராசிரியர் முனைவர் கே. கே. பிள்ளையவர்கள் அவருடைய வரலாற்றுத்துறைப் பணியைப் பாராட்டினார். வரலாற்றுத்துறையில் அவர் மற்றவர்கட்கும் வழி காட்டியாக விளங்குகிறார் எனவும் கூறினார்.

முனைவர் ப. கிருட்டினன், சத்தியமூர்த்தி ஆகியவர்களும் விழாவில் கலந்துகொண்டு பேசினர். கவிஞர் வா. மு. சேதுராமன் வரவேற்புரை வழங்கினார். எசு. டி. காசிநாதன் நன்றி கூறினார். விழாவிற் கலந்து கொண்டு தம்மைப் பாராட்டிய அனைவர்க்கும் முனைவர் க. த. திருநாவுக் கரசு நன்றி தெரிவித்து உரையாற்றினார்.

## அருள்மிகு தண்டபாணியடிகளின் 142ஆவது பிறந்தநாள் விழா

சென்னைக் கந்தகோட்டம் அருள்மிகு முத்துக்குமாரசுவாமி திருக் கோயிலில் 2—12—80 செவ்வாய்க்கிழமையன்று வண்ணச்சரபம் அருள் மிகு தண்டபாணியடிகளின் 142 ஆவது பிறந்தநாள் விழா சிறப்பாக நடைபெற்றது. காலை 7—30 மணி முதல் இரவு 9 மணிவரை சிறப்பு

நிகழ்ச்சிகள் நடைபெற்றன. அடிகளின் பெயரர் புலவர் தி. மு. சங்கர லிங்கம் அவர்கள் அடிகளின் வரலாறுபற்றிச் சொற்பொழிவாற்றினர்.

## வீரமாமுனிவர் மூன்ரும் நூற்ருண்டு விழா

வீரமாமுனிவர் மூன்ரும் நூற்ருண்டு விழா, தமிழ்நாடு அரசின் சார்பில் 7—12—80 இல் இராசாசி மண்டபத்தில், மாண்புமிகு கல்வி அமைச்சர் செ. அரங்கநாயகம் அவர்கள் தொடங்கிவைக்க, கவியரசர் கண்ணதாசன் தலைமைதாங்கச் சிறப்பாக நடைபெற்றது. முனைவர் ம. பொ. சிவஞானம் அவர்கள் தலைமையில் பட்டி மன்றமும், தவத்திரு குன்றக்குடி அடிகளார் தலைமையில் கருத்தரங்கும் நடை பெற்றன. மாண்புமிகு அமைச்சர் இராசேந்திரன் அவர்கள் வாழ்த் துரையும், நிதி அமைச்சர் முனைவர் நாவலர் நெடுஞ்செழியன் அவர்கள் சிறப்புரையும் ஆற்றினர்.

## வேல்சு இளவரசர் திரு. சார்லசு தமிழக வருகை

வேல்சு இளவரசர் திரு. சார்லசு அவர்கள் 2—12—80 செவ்வாய்க் கிழமை மாலை சென்னைக்கு வந்தார். தமிழ்நாடு அரசு சார்பில் மாலை 7 மணிக்கு இராசாசி மண்டபத்தில் அவருக்கு வரவேற்பு அளிக்கப் பெற்றது. ஆளுநர் முதலமைச்சர் முதலானேர் வரவேற்பளித்தனர். அன்று இரவு மாமல்லபுரத்தில் தங்கிய இளவரசர் மறுநாள் காலை மாமல்லபுரச் சிற்பங்களைக் கண்டு வியந்தார். கேளம்பாக்கத்தில் உள்ள பண்ணையைச் சுற்றிப்பார்த்தார். கிண்டி தொழிற்பேட்டை கோட்டை யில் உள்ள கிறித்துவக்கோயில் முதலியவற்றைக் கண்டுகளித்தார்.

### மறைமலையடிகள் நூல்நிலைய வளர்ச்சிக்கு நன்கொடை
### (செல்வி சிலம்பு, ருரு-கசச ஆம் பக்கத் தொடர்ச்சி)

| | | |
|---|---|---|
| உயர்திரு. | வ. சுப்பையா பிள்ளை அவர்கள் கழக ஆட்சியாளர் | ரூ. 10—00 |
| ,, | ஆ. சுப்பையாபிள்ளை அவர்கள், கழக மேலாளர் | 5—00 |
| ,, | A. T. A. ஈசுவர் அவர்கள், சென்னை | 5—00 |
| ,, | கோபாலசாமி அவர்கள், தொண்டமான்துறை | 5—00 |

———

# மதிப்புரை

## டாக்டர் நாவலர் மணிவிழா மலர்

**மலர் பொறுப்பாசிரியர்:** புலவர் இளஞ்செழியன், விலை ரூ. 25-00.

முனைவர் நாவலர் மணிவிழா மலர் வரப்பெற்ரேம். மலர் பலநூறு பக்கங்களுடன் மிக அழகாக அமைந்துள்ளது. மாண்புமிகு தமிழக முதல்வர் ம. கோ. இராமச்சந்திரனுடன் இணைந்து நாவலர் காட்சி யளிக்கும் வண்ணப் படங்களும், நாவலரின் குடும்பப் படங்களும், நாவலர் தாங்கிய பதவிப்படங்களும், தற்போதுள்ள நிலைப் படங்களும் ஆங்காங்கே நிறைந்து மலரைச் சிறப்பிக்கின்றன. புலவர்கள், அறிஞர் கள், அரசியல் தலைவர்கள் ஆகியோரின் கருத்துரைகளும், கட்டுரைகளும், கவிதைகளும் நிறைந்துள்ளன. ''இருபது முதல் எண்பது வரை''

என்னுந் தலைப்பில் நாவலரின் பொது வாழ்க்கை வரலாறு எழுதப் பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது.

நாவலர் நம் கழகத்துடன் நெருங்கிய தொடர்புடையவர். கழக விழாக்கள் பலவற்றில் கலந்து சிறப்பித்தவர். கழகத்தின் வளர்ச்சிக்கு உறுதுணை புரிந்து வருபவர். நாவலரின் தனித் தமிழ்ப் பற்றினைப் பாராட்டிக் கழக ஆட்சிப் பொறுப்பாளர் தாமரைச் செல்வர் அவர்கள், "தமிழக மேடையில் தனித்தமிழ் வளர்த்தவர்" என்னுந் தலைப்பில் எழுதியுள்ள கட்டுரை குறிப்பிடத்தக்கது. தம் இல்லத்தரசியாருடன் காட்சியளிக்கும் நாவலரின் வண்ணப்படம் மலரின் முகப்பில் அமைந்து மலரை மாண்புறச் செய்கிறது. மலர் ஒரு வண்ண மலராகவே விளங்குகிறது.

## பழங்கால இந்தியா-அரசியலும் பண்பாடும் கி. பி. 1206 வரை

[ஆசிரியர்: *பொன் தங்கமணி, எம். ஏ., துணைப் பேராசிரியர் (வரலாறு) அரசினர் கலைக் கல்லூரி, திருவாரூர். பொன்னையா பதிப்பகம், அதங்கோடு, படந்தாலுமூடு அஞ்சல், குமரிவட்டம். விலை: ரூ. 15—00.*]

வட இந்தியா, தென்னிந்தியா ஆகியவற்றின் தொன்மை வரலாறுகள் இந்நூலின்கண் மிக விரிவாக ஆராயப்பட்டுள்ளன. நெடுங்காலமாக வரலாற்றாசிரியர்களால் புறக்கணிக்கப்பட்டு வந்த இத் தென்னக வரலாற்றுக்கு இவ்வாசிரியர் முதன்மை தந்து எழுதியுள்ளமை குறிப்பிடத்தக்கது. பொதுவாக அரசாட்சிகளுக்கு மரபு விளக்கம் கூறுவதுதான் வரலாறு என்றிருந்த நிலையினை மாற்றி, அரசியலோடு மாந்தரின் பண்பாடுகளையும் விளக்குவதுதான் வரலாறு என்னும் உண்மையினை நிலைநாட்டும் வகையில் அமைந்துள்ளது இவ் வரலாறு. இதில் அரசியலும் பண்பாடும் அகப்புறச் சான்றுகளுடன் விளக்கப்படுகின்றன. இந்தியாவின் புவியியல் தொடங்கி கி. பி. 1206 வரை 25 தலைப்புகளில் பழங்கால இந்தியாவைப் படம் பிடித்துக் காட்டுகிறார் ஆசிரியர். ஆராய்ச்சி மாணவர்க்கும், இந்திய வரலாற்றைத் தெளிவாகப் புரிந்துகொள்ள விழைவார்க்கும், இந்நூல் பெரிதும் பயன்படும்.

## வாழ்வாங்கு வாழ வள்ளுவர் வழங்கும் அறிவுரைகள்

[ஆசிரியர்: *மு.ச. சிவம், எம். ஏ., எம். லிட்., டிப். லிங்., மீரா நிலையம், 35, பாப்பாத்தி காடு, ஈரோடு—4. விலை ரூ. 2—00*]

திருக்குறட் பாக்கள் அனைத்தையும் பயின்று, அதினின்று வள்ளுவர் காட்டும் வாழ்க்கை நெறிகளை அறிந்து கொள்ளுதல் எல்லார்க்கும் இயலுவதன்று. இந்நிலையில், "இதோ, வாழ்வாங்கு வாழ வள்ளுவர் வழங்கும் அறிவுரைகள்" எனத் திட்டமிட்டுத் தொகுத்து ஐந்நூற்றுக்கும் மேற்பட்ட அறிவுரைகளை இந் நூலில் அகரவரிசைப்படுத்தித் தருகிறார் இந் நூலாசிரியர். ஆசிரியரின் முயற்சி பாராட்டத்தக்கது.

---

*தென்னிந்தியத் தமிழ்ச் சங்கத்திற்காக*
*சென்னை, 80, பிரகாசம் சாலை, அப்பர் அச்சகத்தில்*
*திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.*
ஆசிரியர்: இரா. முத்துக்குமாரசாமி, எம். ஏ., பி. லிட்.

## கழக நிலையங்களில் கிடைக்கும்

# பிற பதிப்பாளரின் புதிய வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| சிலம்பின் தனித்தன்மை — ஆர். எஸ். மார்க்கபந்து சர்மா | 14 | 00 |
| தொல்காப்பியம் சிறப்புப்பாயிரம் — (உரைவளம்) ஆ. சிவலிங்கனார் | 10 | 00 |
| திருத்தணிகை சந்நிதி முறை — பதிப்பாசிரியர் மு. சண்முகம்பிள்ளை | 20 | 00 |
| செங்கோர் — டாக்டர் க. ப. அறவாணன் | 7 | 00 |
| சிரிப்பும் சிந்தனையும் — புலவர் கீரன் | 3 | 00 |
| மனிதனாகப் பிறப்பேன் ,, | 3 | 00 |
| வந்தவர் மொழியா செந்தமிழ்ச் செல்வமா? — புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் | 7 | 90 |
| இராமாயணக் குட்டிக் கதைகள் — தி. வேங்கடகிருஷ்ண ஐயங்கார், எம்.ஏ (தமிழ்), எம்.ஏ., பி.ஓ.எல். (இந்தி) | 4 | 50 |
| வைகுந்தம் திறந்தது — டாக்டர் ம. பொ. சிவஞானம், தொகுப்பு : ம. இரா. இளங்கோவன் | 5 | 00 |
| புதுக்கோட்டை சமஸ்தான வரலாறு — சிரஞ்சீவி | 7 | 00 |
| மகரந்தச் சிறகுகள் — கனியூர் மது நஞ்சன் | 6 | 00 |
| புதுக்கவிதையியல் — டாக்டர் ந. வீ. செயராமன் | 4 | 00 |
| பணவிடுதூது — பதிப்பாசிரியர் இரா. நிர்மலாதேவி | 6 | 00 |
| திருக்குருகூர் திருவேங்கடநாதன் பிள்ளைத்தமிழ் — ச. சிவகாமி | 7 | 50 |
| வாழ்க நீ வசந்தி — தஞ்சை செல்வன் | 12 | 50 |
| கடல் கன்னி — ப இராமசாமி | 6 | 50 |
| காவல் — கௌசிகன் | 5 | 00 |
| புண்ணிய பூமியில் புனித யாத்திரை — வி. என். சிதம்பரம் | 5 | 00 |
| காலத்தைப் பயன்படுத்துவது எப்படி? — பி சி. கணேசன் | 4 | 00 |
| ஐம்பொறி அகராதி — பன்மொழிப் புலவர் மு. ச. சிவம். எம்.ஏ., எம்.லிட்., | 20 | 00 |
| வள்ளுவர் வழங்கும் அறிவுரைகள் ,, | 2 | 00 |
| வள்ளுவர் வினவிய வினாக்கள் ,, | 0 | 60 |
| பெண்ணின் பெயர்கள் ,, | 2 | 00 |
| Self Government in India Vedic and Post Vedic — N. D. Pavagee | 95 | 00 |

பதிவு எண் M 4899.



அப்பர் அச்சகம், சென்னை - 1.